# சங்கர
# பொக்கிஷம்

வழங்குபவர்

**கவிஞர் கண்ணதாசன்**

*வெளியிடுவோர் :*

**குடும்ப நூலகம்**

*12, ஹென்ஸ்மென் ரோடு,*

*தி. நகர், சென்னை 600 017.*

# முன்னுரை

இளம் பிராயத்தினரிடையே கட்டுப்பாட்டையும் ஒழுக்கத்தையும் வளர்த்து, மரண காலம்வரை அவர்களை உயர்ந்தவர்களாக வாழச் செய்ய நம்முடைய மூதாதையர் எடுத்துக்கொண்ட முயற்சி, கொஞ்ச நஞ்சமல்ல.

அக்காலங்களில் குருபக்தியினுலும், குருகுல வாசத்தினுலும் அறம் நிறைந்த அந்தணர்களாய், மானிட ஜாதியின் எல்லாப் பிரிவினரும் திகழ்ந்தார்கள்.

பஞ்சமா பாதகங்கள் மிகவும் குறைவாக இருந்தன.

சூழ்நிலை, நிர்ப்பந்தங்களினுல் ஒருவன் தவறு செய்தாலும், அந்தத் தவறுக்காக வருந்தும் சுபாவமுடையவனுக இருந்தான்.

குருவையே கல்லாலடிக்கும் குணக்கேடோ, இளம் பருவத்திலேயே சோம்பேறித்தனமோ அவனிடத்தில் இல்லை.

நிரந்தரமான மேன்மைக்கு ஒரு அஸ்திவாரத்தை குருபக்தியும், குருகுல வாசமும் அவனுக்கு அமைத்துத் தந்தன.

அந்த நாளைய சமுதாயம் ஓர் இளைஞனை ஐந்து வயதிலேயே நன்ருக வளைத்து வைத்தது. அதனுல் ஐம்பதிலும் அவன் வளைந்தான்.

ஆடு மாடுகளைக்கூட இளம் பிராயத்திலே பழக்கத் தொடங்கினுல், அற்புதமாகப் பழக்கிவிட முடியும்.

இந்தக் குருகுல வாசம் பற்றி 'அர்த்தமுள்ள இந்துமதம்' ஒன்பதாம் பாகம் 'ஞானத்தைத் தேடி' என்ற நூலில் நான் ஓரளவுக்குக் குறிப்பிட்டிருக்கிறேன்.

ஆனுல் காஞ்சிப் பெரியவர்கள் அளவுக்கு அதை நான் விவரித்துவிட முடியாது.

நானும் மூன்ருண்டுகளுக்குமேல் குருகுல வாசம் செய்து முன்னேறியவன்தான் என்ருலும், அதைவிடக் கட்டுப்பாடான குருகுல மனப்பான்மையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர், காஞ்சிப் பெரியவர்.

நிலையையும் கண்ட சங்கரர், மஹா லட்சுமியை நினைத்து மன முருகி, இவர்களது ஏழ்மை நிலையை மாற்றும்படி விண்ணப் பித்துப் பாடினார். அவ்வண்ணமே பொன் மழை பொழிந்தது.

சங்கரர் பாடிய முதல் ஸ்தோஸ்திரமே, 'கனகதாரஸ்தவம்.' இன்றும் அந்த இல்லம், சொர்ணத்து இல்லம் என்ற பெயரில் காலடியில் இருக்கிறது.

ஒரு நாளி, அன்னை ஆரியாம்பாளுக்கு நோய் உண்டாயிற்று. நடக்க முடியாத அளவுக்குப் பலஹீனம் ஏற்பட்டது.

அம்மையார் ஒரு நாள்கூடத் தவறாமல் அவ்வூரில் ஓடும் பூர்ணா என்னும் புனித நதியில் நீராடி மகிழ்வார்.

இப்போது பலஹீனமான நிலையில் அவரால் அங்குச் சென்று நீராட முடியவில்லை. இது அவருக்கு மிகவும் குறையாக இருந் தது.

அன்னையின் இந்தத் துயரை நீக்க எண்ணினார் சங்கரர்.

பூர்ணாநதியை பிரார்த்தித்து, "அன்னையின் துயர் தீர்க்க வா, வா!" என அழைத்தார் அவர்.

சிவபெருமானின் அவதாரமான அவரது சொற்களுக்கு நதி கட்டுப்பட்டுத் தனது போக்கையே மாற்றிக் கொண்டு, சங்கரர் வீட்டுத் தோட்டத்துக்கே வந்தது. அன்னை பேருவகை கொண்டார்.

சந்நியாசத்திலேயே விருப்பமுற்றிருந்த சங்கரருக்கு வயது எட்டு முடிந்தது.

ஒரு நாள் சங்கரர், பூர்ணா நதியில் நீராடுகையில் அவரது காலை முதலை ஒன்று கவ்விக் கொண்டது.

'அம்மா, அம்மா' என்று சங்கரர் அலறினார். உயிருக்கு உயிரான குழந்தையை முதலை கவ்வி இருப்பதைக் கண்டு தாயார் துடித்தார்.

முதலையின் பிடியிலிருந்து ஒரு பெண்ணால் எப்படிக் குழந்—தையை விடுவிக்க முடியும்?

"ஐயோ கையால் ஆகாத பாவியாக நிற்கிறேனே, உன்னைக் காப்பாற்றுவது என் கையில் இல்லையே, என்ன செய்வேன்" என்று பதறினார்.

"அம்மா, என்னைக் காப்பது உங்கள் கைகளில்தான் இருக் கிறது' என்றார் சங்கரர்.

இதன் உட்பொருள் விளங்காமல் அம்மையார் தவித்தார்.

''அம்மா, நான், இந்தப் பிறவியில் முதலையால் சாக வேண்டும் என்பது விதி. ஆனால் சந்நியாசம் வாங்கிக்கொண்டு துறவியாகி வீட்டையும், உற்றார் உறவினர்களையும் விட்டு விட்டு வெளியேறினேனாகில் இப்பிறவி முடிந்து வேறு பிறவி கிடைத்ததாகும். வேத ஆகமப்படி சந்நியாசம் என்பது மறு பிறவியாகும். அடுத்த பிறவியில் முதலை என்னை ஒன்றும் செய்ய முடியாது. எனவே, அம்மா! நான் துறவியாவதற்கு நீங்கள் அனுமதித்தால் முதலை என்னை விட்டு விடும். என்னைப் பிழைக்க வைப்பது உங்கள் கரத்தில் தான் இருக்கிறது'' என்றார் சங்கரர்.

தவம் இருந்து பெற்ற புதல்வனைப் பிரிய எந்தத் தாய்க்கு மனம் வரும்? ஆனாலும் மகன் உயிர் பிழைத்தால் போதுமென்று அனுமதித்தார்.

மாதாவைப் பிரிந்து, குருவைத் தேடி, காலடியில் இருந்து காலடி வைத்தார் ஆதி சங்கரர்.

அதோ! அந்தப் புனிதக் காலடிச்சுவடு, அகண்ட பாரதத்தை வலம் வரப் போகும் அந்தக் காலடி, பிரம்ம ஞான வித்தைகளை, வேத உபநிஷத்துக்களை உலகம் உணரும் வண்ணம் விளக்கப் போகும் காலடி, அழுந்தப் பதிந்து புறப்பட்டது.

காடு, மேடுகளைக் கடந்து, மனோ வேகத்துடன் சென்ற காலடி இதோ, நர்மதா நதி தீரத்துக்கு வந்து விட்டது.

அப்போது நதி மாதா, பொங்கிப் பிரவகித்துக் கொண்டிருந்தாள்.

சங்கரர் தன் சக்தியால் அப் பிரவாகத்தைக் கமண்டலத்துக்குள் அடக்கினார்.

அந்த நதியை மக்களுக்குப் பயன்படும் ஓடுகிற நதியாக, கரைக்குள் அடங்கிப் போகும் நதியாகச் செய்தார்.

கரையிலிருந்த குரு கோவிந்தர் தன் சிஷ்யனைக் கண்டு கொண்டார். வியந்தார்.

முறைப்படி அவருக்குத் துறவு தந்தார்; 'மகா வாக்யங்களை' உபதேசித்தார்.

அத்வைத விதியை உலகினருக்கு விளக்கிக் கூறக் கிளம்பினார்.

காசி..

கங்கைக் கரையில் இவரது உபதேசம் கங்கை போலக் கொந்தளித்து வந்தது. அத்வைதத்தை எதிர்த்த பிற மதத்தினரும் அவரது உபதேசத்தினால் மன அழுக்கு நீங்கித் தெளிவுபெற்றனர்.

தனது உபதேச ஒலிகளெல்லாம் காற்றில் சங்கமித்து விடாது நிலைத்து நிற்க அவற்றை எழுதி வைத்தார்.

பிரம்ம சூத்திரம், உபநிஷதங்கள், கீதை ஆகிய நூல்களுக்கு உரை எழுதினர்.

கணேச பஞ்சரத்தினம் போன்ற ஸ்தோஸ்திரங்களையும் இயற்றினர்.

அக் காலத்தில் நற்குருவைத் தேர்ந்தெடுக்கக் காசிக்குத் தான் செல்வார்கள். இவ்விதம் சோழ நாட்டைச் சேர்ந்த சநந்தனர் காசிக்குச் சென்றார். ஆதிசங்கரரைக் கண்டு அவரிடம் மிகுந்த பக்தி கொண்டு சீடரானர். இவர் நரசிம்ம மூர்த்தியிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்.

இவரே சங்கரரின் முதல் சீடர். இவருக்குப் பத்மபாதர் என்ற பெயரைச் சூட்டினர் குருநாதர்.

ஒரு நாள் சங்கரர் கங்கையில் நீராடி விட்டு சீடர் குழாத்தோடு விஸ்வநாதர் ஆலயத்திற்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது ஒரு புலையனும், புலைச்சியும் சங்கரர் போகும் பாதையின் குறுக்கே வந்து விட்டனர். புலையன் கையில் நான்கு நாய்களைப் பிடித்திருந்தான்.

'விலகிப் போ, போ, தூரப் போ!' என்று சங்கரரின் சீடர்கள் சத்தமிட்டனர்.

புலையன் சிரித்தான். "அத்வைதம், அத்வைதம் என்று சொல்லி விட்டு என்னை விலகிப் போகச் சொல்கிறீர்களே, இது பெரிய முரண்பாடல்லவா? எல்லாமே ஒரே சத்தியமான கடவுளின் தோற்றந்தான் என்கிறது உங்கள் அத்வைதம். அவ்வாறெனின், உங்களைப் போலவே நாங்களும் அதே சத்தியம் தான். உடல் நமக்கு வேறு வேறுனலும், உடலுக்குள்ளே இருக்கிற பரமாத்மா ஒருவர்தான். இந்த உடம்பைப் பற்றிய எண்ணத்தை விலக்கி விட்டு பரமாத்மாவாக இருக்கத்தான் இந்த ஆசாரியர் போதிக்கிறார். அப்படி இருக்க உங்கள் உடம்பின் அருகிலிருந்து எங்கள் உடம்பு விலகிப்போக வேண்டுமென்று சொல்வதில் பொருள் இல்லை. உங்கள் உடம்புக்குள் உள்ள ஞான ஒளியிலிருந்து, எங்கள் உடம்பிற்குள் உள்ள ஞான ஒளி விலக வேண்டும் என்று நீங்கள் கருதினல் அதுவும் அர்த்தமற்றதாகும். ஏனெனில், இந்த ஞான ஒளி அனைத்தும் ஒன்றே தான். தன்னை விட்டே தான் எப்படி விலக முடியும்?" என்று நறுக்குத் தெரித்தாற்போல் கேட்டு விட்டான் அந்தப் புலையன்.

மெய் நடுங்கிய சங்கரர், இவ்வளவு ஞான நிலையை அடைந்து பேசுபவர் புலையனுக இருக்க முடியாது. காசி விஸ்வ

நாதரும், விசாலாட்சி அம்மையுமே தம்மைச் சோதிக்க வந்துள்ளனர் என்பதை ஞான திருஷ்டியினுல் உணர்ந்து மனீஷா பஞ்சகம் என்ற ஐந்து சுலோகங்களைப் பாடினுர்.

புலையன் விஸ்வநாதரானுர்; புலைச்சி விசாலாட்சியானுர்; நான்கு நாய்களும் நான்கு வேதங்களாயின.

''என் மறு அவதாரமான சங்கரா ! வாய்ப்பேச்சில் மட்டும் வேதாந்தம் கூருமல், வாழ்விலேயே அதை நடத்திக் காட்டுபவன் என்று உலகறியவே இந்த நாடகம் நடித்தேன்'' என்று கூறி ஆசி வழங்கி மறைந்தார்.

சங்கரருக்குப் பதினுறு வயது நிரம்பிய சமயம். ஒரு தொண்டுக் கிழவரோடு, சங்கரர் வாதம் புரிந்தார். வாதம் முடிவற்ற தாகி நாட்கணக்கில் ஓடிக் கொண்டிருந்தது. தமக்குச் சமதை யாக வாதம் புரியும் அந்தக் கிழவர் நிச்சயமாக சாமான்யமானவ ராக இருக்க முடியாதே என்று யோசித்த சங்கரருக்கு, ஞான திருஷ்டியில் பிரம்ம சூத்திரதை இயற்றிய வியாச மகா முனிவரே அவர்தான் என்பது தெரிந்தது.

''மகரிஷியே! தங்களிடம் அடியேன் வாதிக்குமாறு செய்ய லாமா? அபசாரம், செய்து விட்டேனே'' என்று வியாசரை வணங்கினுர்.

வியாசர் அருளுடன் ''என் சுய உருவைக் காட்டினுல் நீ உன் வாதத் திறனைக் காட்டமாட்டாய் என்றே வேஷம் போட் டேன். நீ எனது பிரம்ம சூத்திரத்துக்குத் தந்துள்ள விளக்கமே நான் மனமார உவப்பதாகும். அதுவே உண்மை. இந்த உண்மையை நீ நாடு முழுவதும் பிரசாரம் செய்ய வேண்டும். இன்ருேடு உனக்குப் பதினுருண்டு நிறைந்தது. இதோடு ஆயுளை முடித்து விடாதே! உனக்கு இன்னும் பதினு ருண்டு வாழ்வினைப் பிரம்மாவிடமிருந்து பெற்று வந்துள் ளேன். உன் வாக்கியங்களை நாடு முழுவதும் பரப்புவாயாக'' எனக் கூறி மறைந்தார் வியாச முனிவர்.

அத்வைத உண்மையினை தேசமெங்கும் சென்று பரப்ப வேண்டுமென்று வியாசர் விரும்பியபடியால் சங்கரர் காசியை விட்டேகினுர்.

பிரயாகையில் குமாரில பட்டருக்கு, அவர் மரணத் தரு வாயில் இருக்கும் பொழுது 'கர்மாக்கள் பலனளிக்காது, இறைவனே பேரானந்தம்' என்ற தத்துவத்தை விளக்கினுர்.

மாஹிஸ்மதி என்ற நகரில் வாழ்ந்த மண்டன மிச்ரா— சரஸவாணித் தம்பதியினரையும் வாதத்தில் வென்று அடிமை யாக்கினுர், சங்கரர்.

மண்டன மிச்ரா துறவியாகி சங்கரருடன் செல்கிறார் என்பதைக் கண்ணுற்ற எண்ணற்ற கர்ம மீகாம்சகர்கள் சங்கரரின் ஞான மார்க்கத்தைத் தழுவலாயினர்.

வழி நடையில் சிறிது களைப்பு ஏற்பட்ட காரணத்தினால் சரஸவாணி பின்தங்கினார். அது துங்கபத்ரா நதிக்கரையோரத்து, சிருங்ககிரி என்னும் ஊராகும்.

சங்கரர் திரும்பிப் பார்த்து, அங்கு ஒரு பீடம் அமைத்து, சரஸவாணியை அங்கு பிரதிஷ்டை செய்தார். இது சிருங்ககிரி சாரதா பீடம் என வழங்கலாயிற்று.

சிருங்ககிரியில் பகவத் பாதர் தங்கிய பொழுது, தமது அன்னையின் உயிர் ஊசலாடுவதை உணர்ந்தார்.

அன்னைக்கு இறுதிக் கடன் முடிப்பதற்காக விரைந்தார். கடைசிக் காலத்தில் மகனைக் கண்ட தாய் அகம் மகிழ்ந்தாள்.

திருமாலை நோக்கிப் பாமாலை பாடினார், ஸ்ரீசங்கரர். வைகுந்த லோகத் தூதர்கள் ஆர்யாம்பாளை விமானத்தில் ஏற்றிச் சென்றனர்.

ஊராரின் எதிர்ப்புக் கிடையில் தாமொருவரே அன்னையின் உடலைச் சிதையிலிட்டு எரியூட்டினார். அன்னையின் இறுதிக் கடனை முடித்ததும், சங்கரர் நாடு முழுவதும் திக்விஜயம் செய்தார்.

கர்நாடக மாநிலத்தில் மூகாம்பி என்ற ஊரில் தங்கிய போது, அந்தணர் ஒருவர் தமது ஊமைப் பிள்ளையுடன் பெரிய வரைத் தரிசிக்க வந்தார்.

சங்கரர் அப் பிள்ளையிடம் ''நீ யார்?'' என்று வினவினார்.

''நான் இவ்வுடல் அல்ல; எங்கும் வியாபித்துள்ள ஆத்மா வான ' ஒரே சத்தியம் தான்'' என்று உடனடியாகப் பதில் அளித்தான் அப்பிள்ளை.

அவருக்கு ஹஸ்தாமலர் என்ற பெயர் சூட்டி முக்கியமான சீடர்களில் ஒருவராக்கிக் கொண்டார்.

பத்மபாதர், மண்டனமிச்ரர், ஹஸ்தாமலர், கிரி போன்ற தலைமைச் சீடர்களோடு வேறு பல ஞானிகளும்கூட சங்கரரிடம் வேதப்பாடம் கற்று வந்தனர்.

கிழக்குக் கடற்கரையில் உள்ள ஜகந்நாதபுரி ஊரில் கோவர்த்தன பீடம் அமைந்து, அதில் பத்மபாதரை ஆசாரியராக இருக்கச் செய்தார்.

மேற்குக் கடற்கரையில் உள்ள துவாரகையில் ஒரு மடம் நிறுவி, ஹஸ்தாமலரை ஆசாரியராக அங்கு அமரச் செய்தார்.

சங்கரர் தமிழகத்தில் திருவானைக்காவு, திருவிடை மருதூர், திருச்செந்தூர் போன்ற புண்ணிய ஸ்தலங்களுக்கு விஜயம் செய்து பல பெருமைகளைச் சேர்த்தார்.

திருப்பதி வேங்கடரமணப் பெருமாளைத் தரிசித்து, மக்களை வசீகரிக்கும் ஒரு யந்திரத்தை அங்கு ஸ்தாபித்தார். அன்றிலிருந்து திருப்பதியில் தினமும் திருநாள் தான்.

ஆந்திர தேசத்திலுள்ள ஸ்ரீசைலம் ஆசாரியரின் உள்ளத்தை மிகவும் கவர்ந்த இடம். இங்குக் கோவில் கொண்டுள்ள மல்லிகார் ஜுனருக்காக 'சிவாநந்த லஹரி' பாடினார்.

ஸ்ரீசைலத்தை அடுத்த மனித சஞ்சாரமற்ற ஹாடகேசுவரம் என்ற இடத்தில் சங்கரர் தன்னந் தனியாகத் தவம் இருந்தார்.

நரபலி கொடுத்துச் சிவனை வணங்கும் கபாலிகர்களின் தலைவன் கிரகசன். தமது கொள்கையை எதிர்க்கும் ஒரே ஒருவனையும் தான் பலி கொடுத்து விட வேண்டும் என்று கருதித் தவம் இருக்கும் சங்கரரிடம் வந்தான்.

''கபாலிக்கு உங்களைப் பலி கொடுக்கச் சம்மதம் தாருங்கள்'' என்று பெரியவரிடம் கேட்டான் கிரகசன்.

தியாக மூர்த்தி ''இந்த உடலால் எந்தப் பயனும் இல்லை என்று நினைத்தேன். இதைக் கொண்டு ஏதோ பயன் அடைவதாக நீ கருதுவதற்கு நன்றி. நீயே என் தலையை வெட்டி எடுத்துக் கொள்'' என்றார் ஆசாரியார்.

கிரகசன் வாளை ஓங்கி ஆசாரியரின் தலையைக் குறி பார்த்தான்.

ஒரு நொடியில் பத்மபாதர் 'நரசிம்ம வடிவில் வந்து' வெட்ட இருந்த கிரகசனை கிழித்தெறிந்து விட்டார்.

ஸ்ரீ சங்கரர் நரசிம்ம மூர்த்தியை வணங்கினார்.

அவர் ஹிமாசலப் பிரதேசத்திலுள்ள பதரி நாதத்தை அடைந்தபோது மஹாவிஷ்ணு அவருக்குத் தரிசனம் தந்தார். ''இங்கே அலக நந்தா நதிப் படுகையில் எனது விக்ரகம் ஒன்று புதையுண்டு கிடக்கிறது. அதை எடுத்து பிரதிஷ்டை செய்வாயாக'' என்று இறைவன் ஆணையிட்டார்.

அவ்வாறே, ஆதிசங்கரர் செய்தார். பத்ரி நாராயணன் என்று இன்றளவும் கொண்டாடப்படும் மூர்த்தி இதுவேயாகும்.

கேதார் நாத்திற்கு வந்த சங்கரர் தமது பூத உடலைப் போட்டு விட்டு, யோக சக்தியின் மூலம் சூட்சும உடலோடு கைலாயம் சென்றார்.

அங்கு சிவபெருமானிடமிருந்து ஐந்து ஸ்படிக லிங்கங்களைப் பெற்று வந்தார்.

நேபாளத்தில் நீலகண்ட க்ஷேத்திரத்தில் ஐந்து லிங்கங்களுள் ஒன்றான வரலிங்கத்தை பிரதிஷ்டை செய்தார்.

முக்திலிங்கத்தை கேதாரி நாதத்திலும், சிதம்பரத்தில் மோட்சலிங்கத்தையும், சிருங்ககிரியில் போகலிங்கத்தையும் பிரதிஷ்டை செய்தார்.

தமது லோக வாழ்வை முடித்துக்கொள்ள விரும்பிய சங்கரர் ஏழு மோட்ச ஸ்தலங்களில் ஒன்றான காஞ்சிக்கு விரைந்தார்.

மன்னன் ராஜசேனன் ஆசாரியரைப் பணிந்து வரவேற்றான். சுவாமிகள் விசுவேசுவரர் ஆலயத்தில் தங்கினார்.

'காம கோடி பீடம்' என்று தாம் தங்கிய மடத்திற்குப் பெயரிட்டு ஐந்து லிங்கங்களில் எஞ்சிய யோகலிங்கத்தை அங்கு பிரதிஷ்டை செய்தார்.

சிவ பாதாதி கேசாந்த ஸ்தோஸ்திரம், சிவ கேசாதி பாதாந்த ஸ்தோஸ்திரம், ஸௌந்தர்ய லஹரி, துவாதச ஜோதிர் லிங்க ஸ்தோஸ்திரம் போன்ற பாடல்கள் பாடி அருளியுள்ளார், சங்கரர்.

விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோஸ்திரம் முதலியனவும் பாடியுள்ளார்.

சிவன், அம்பிகை, திருமால், விநாயகர், சூரியன், முருகன் என்ற ஆறு தெய்வங்களையும் ஒன்றாக நினைத்து வழிபடும் 'சண்மதம்' ஏற்படுத்தினார்.

சங்கருடன் காஞ்சியில் வாதிட்ட பண்டிதர்களுக்கிடையே ஏழு வயது சிறுவனும் ஒருவன். அவனை வென்று அவனுக்கு சர்வக்ஞ ஆத்ம முனி என்ற நாமம் சூட்டி காம கோடி பீடத்தின் முதல் சிஷ்யனாக்கினார்.

பிற மதங்கள் எழுபத்திரண்டும் இருந்த இடம் தெரியாமல் அழிந்தன.

அவர் பணி முடிந்தது.

வயது முப்பத்திரெண்டு......

காமாட்சி தேவியிடம் சென்று திரிபுர சுந்தரி வேதபாதஸ்தவம்' என்ற பாடலால் அம்பிகையைத் துதித்தார். பாடல் முடியும்போது பாடத்தக்க அவரது வாழ்வு முடிந்தது.

பராசக்தியோடு இரண்டறக் கலந்துவிட்டார் ஆதி சங்கரர்.

## காம கோடி பீடத்தை அலங்கரித்தவர்கள்

1. ஸ்ரீ ஆதி சங்கரர் (நிறுவனர்)
2. ஸ்ரீ சுரேஸ்வராச்சார்யார்
3. ஸ்ரீ சர்வக்ஞாத்மன்
4. ஸ்ரீ சத்யபோதர்
5. ஸ்ரீ ஞானனந்தர்
6. ஸ்ரீ சுத்தானந்தர்
7. ஸ்ரீ அனந்தானந்தர்
8. ஸ்ரீ கைவல்யானந்தர்
9. ஸ்ரீ கிருபா சங்கரர்
10. ஸ்ரீ சுரேஸ்வரர்
11. ஸ்ரீ சிவானந்த சித்கணர்
12. ஸ்ரீ சந்திரசேகரர் I
13. ஸ்ரீ சத்சித்கணர்
14. ஸ்ரீ வித்யாரண்யர் I
15. ஸ்ரீ கிஷ்பதி கங்காதரர்
16. ஸ்ரீ உஜ்வல சங்கரர்
17. பாலகுரு ஸ்ரீ சதாசிவர்
18. ஸ்ரீ யோகி திலக சுரேந்திரர்
19. ஸ்ரீ மார்த்தாண்ட வித்யாகணர்
20. ஸ்ரீ மூக சங்கரர்
21. ஸ்ரீ சார்வ யௌம சந்திரசேகரர்
22. ஸ்ரீ பரிபூரண போதேந்திரர்
23. ஸ்ரீ சத்சித் சுகர்
24. ஸ்ரீ சித் சுகர் I
25. ஸ்ரீ சச்சிதானந்த கணர்
26. ஸ்ரீ பிரஞ்ஞகணர்
27. ஸ்ரீ வித்விலாஸர்
28. ஸ்ரீ மகா தேவேந்திர சரஸ்வதி I
29. ஸ்ரீ பூர்ண போதேந்திரர் I
30. ஸ்ரீ போதேந்திர சரஸ்வதி I
31. ஸ்ரீ பிரும்மானந்தகணர் I
32. ஸ்ரீ சிதானந்தகணர்
33. ஸ்ரீ சச்சிதானந்தர் II
34. ஸ்ரீ சந்திர சேகரர் II

35. ஸ்ரீ பஹூரூப சித்சுகர்
36. ஸ்ரீ சித் சுகானந்தர்
37. ஸ்ரீவித்யாகணர் III
38. ஸ்ரீ அபிநவசங்கரர்
39. ஸ்ரீ சத்சித் விலாஸர்
40. ஸ்ரீ சோபனு மகாதேவர் III
41. ஸ்ரீ கங்காதரர் II
42. ஸ்ரீ பிரும்மானந்த கணர்
43. ஸ்ரீ ஆனந்த கணர்
44. ஸ்ரீ பூர்ண போதர் II
45. ஸ்ரீ பரமசிவர் II
46. ஸ்ரீ சாந்ரானந்த போதேந்திரர்
47. ஸ்ரீ சந்திரசேகரர் III
48. ஸ்ரீ அத்வைதானந்த போதர்
49. ஸ்ரீ மகாதேவர் II
50. ஸ்ரீ சந்திர சூடர்
51. ஸ்ரீ வித்யா தீர்த்தர்
52. ஸ்ரீ சங்கரானந்தர்
53. ஸ்ரீ பூர்ணானந்த சதாசிவர்
54. ஸ்ரீ வியாஸாசல மகாதேவர்
55. ஸ்ரீ சந்திர சூடர் II
56. ஸ்ரீ சர்வக்ஞ சதாசிவ போதர்
57. ஸ்ரீ பரமசிவர் II
58. ஸ்ரீ ஆத்ம போதர்
59. ஸ்ரீ பகவன் நாம போதேந்திரர்
60. ஸ்ரீ அத்யாத்ம பிரகாசர்
61. ஸ்ரீ மகாதேவர் v
62. ஸ்ரீ சந்திர சேகரர் v
63. ஸ்ரீ மகாதேவர் vi
64. ஸ்ரீ சந்திர சேகரர் vi
65. ஸ்ரீ இளையாத்தாங்குடி சுவாமிகள்
66. ஸ்ரீ சந்திர சேகரர் vii
67. ஸ்ரீ மகா தேவர் vii
68. ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்

நடமாடும் தெய்வம் என்று போற்றத்தக்க 68 - வது பட்டத்தை அலங்கரிக்கும் பெரியவர்கள் ஆதிசங்கரரின் மறு அவதாரமாகவே விளங்குகிறார்கள்.

இவர் வகுத்துத் தந்துள்ள திட்டங்கள் மிகவும் எளிமை யானவை. எல்லோர்க்கும் பாகுபாடின்றிப் பயன்படக் கூடியவை களாகும்.

அவை, காலையிலும் மாலையிலும் சைவ பக்தர்கள் 'சிவ சிவ' என்றும், வைணவர்கள், 'நாராயண நாராயண' என்றும் காலையிலும் மாலையிலும் இறைவனைத் துதிக்க வேண்டும் என்ற திட்டமும், பசுக்களைப் பராமரித்தல் போன்ற திட்டமும், பிடி அரிசித் திட்டமுமாகும்.

காலடிச் சுவடுகள் முடிவதில்லை......

**ஜய ஜய சங்கர**
**ஹர ஹர சங்கர**



# சங்கர பொக்கிஷம்

பிள்ளையாருக்குத் தேங்காய் உடைப்பது எதற்காக? விக்கி னேஸ்வரர், தம் அப்பாவான ஈஸ்வரனைப் பார்த்து, 'உன் சிரசையே எனக்குப் பலி கொடு' என்று கேட்டுவிட்டாராம். எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது எதுவோ, அதைத் தியாகம் பண்ணினால்தான் மகா கணபதிக்குப் பிரீதி ஏற்படு கிறது. அவ்வளவு பெரிய தியாகம் பண்ணுவதற்குத் தயார் என்ற அறிகுறியாகத்தான், ஈஸ்வரனைப் போலவே மூன்று கண்களுடைய தேங்காயைச் சிருஷ்டித்து அந்தக் காயை அவ ருக்கு நாம் அர்ப்பணம் பண்ணும்படியாக ஈசுவரன் அநுக்கிர கித்திருக்கிறான்.

நமக்குப் பார்க்கப் பார்க்க அலுக்காத வஸ்துக்கள் சந்திரன், சமுத்திரம், யானை ஆகியன. இவற்றை யெல்லாம் பார்க்கப் பார்க்க ஆனந்தம் பொங்கும். அதனால்தான் குழந்தை சுவாமி தன்னைப் பார்க்கிற ஜனங்களுக்கு எல்லாம், பார்க்கப் பார்க்க ஆனத்தம் எப்போதும் பொங்கிக் கொண்டி ருக்கும்படியாக யானை உருவத்தோடு இருக்கின்றார். அது ஆனந்த தத்துவம்! ஆராத ஆசையின் தத்துவம்!

''தோர்பி: கர்ணம்'' என்பதே 'தோப்புக் கரணம்' என்று மாறியது. ''தோர்பி'' என்றால் கைகளால் காதைப் பிடித்துக் கொள்வது.

ஃ ஃ ஃ

ஜாஸ்தி படிக்கப் படிக்கத்தான் ஜாஸ்தி நாஸ்திகம், ஜாஸ்தி அடங்காமை, ஜாஸ்தி அநாசாரம் என்று இப்போது கொண்டு விட்டிருக்கிறது. இந்த நிலைமை மாறவேண்டுமானால் அதற்கு வழி ஒரு உதாரணத்துக்குக் காட்டவாவது, மியூஸியக் காட்சி வஸ்து மாதிரியாகவாவது, குருபக்தி என்பதை ஏற்படுத்திக்

காட்டவேண்டும். குருகுலவாஸப் படிப்பு முறையில்தான் குரு பக்தி இருந்திருக்கிறது.

ஃ ஃ ஃ

நமக்குப் பல பிறவிகள் உண்டாகின்றன. அந்தப் பிறவிகளுக் கெல்லாம் காரணம் என்ன? உடம்பு எதனால் வருகிறது? முன் ஜன்மத்தில் பண்ணிய பாப புண்ய பலன்களை நாம் அநுபவிக்க வேண்டும். ஆத்மாவால் பாப புண்யங்களை அநுபவிக்க முடியாது. ஆத்மாவை நெருப்பால் சுட முடியாது. சந்தனத்தை அப்பிக் குளிரச் செய்து விட முடியாது. ஆகையால் கர்மாவை அநுபவிப்பதற்காக ஓர் உடம்பு வேண்டியிருக்கிறது. நாம் செய்த பாப புண்ய பலனைக் கடவுள் நமக்கு உடம்பைக் கொடுத்து அதையே 'நான்' என்று நினைக்கச் செய்து தண்டிக்கிறார். நாம் செய்த பாவத்திற்காக ஈச்வரன் உடம்பைக் கொடுத்து நம்மைச் சிக்ஷை செய்கிறார். இந்த உடம்பு போனதோடு பாபம் போகாவிட்டால் மறுபடியும் உடம்பைக் கொடுத்துச் சிக்ஷிக்கிறார். ஆகையால் நாம் பண்ணுகிற பாபம் தான் உடம்புக்குக் காரணம். இனிமேல் பாபம் பண்ணாமல் இருந்தால் உடம்பு வராது. 'பாபம் பண்ணக் கூடாது' என்ற நினைவு தினமும் இருக்க வேண்டும்.

ஃ ஃ ஃ

நாம் செய்யும் பாபத்துக்கு உடம்பு தண்டனை. பாபத்துக்கு மூலம் கெட்ட காரியம். கெட்ட காரியத்துக்கு மூலம் ஆசை. ஆகையால் நம் கஷ்டம் அனைத்துக்கும் மூல காரணமாகிய ஆசையை நிவர்த்தி பண்ணினால்தான் நிரந்தரமான துக்க நிவர்த்தி உண்டாகும்.

ஃ ஃ ஃ

நாம் தூங்குகிறோம்; தூங்கி விழிக்கிறோம். தூங்கும் போதே சில ஸமயங்களில் ஸ்வப்னம் உண்டாகிறது. விழித்துக் கொண்டிருப்பது ஜாக்ரத் அவஸ்தை. கனவு காண்பது ஸ்வப்-னாவஸ்தை. நன்றாகத் தூங்குவது ஸுஷுப்தி. இப்படி மூன்று அவஸ்தைகள் இருக்கின்றன. 'நாம் விழித்துக்கொண்டிருப்பது வேலை செய்வதற்காக. நன்றாகத் தூங்குவது வேலை செய்த சிரமமெல்லாம் போவதற்காக. இந்த இரண்டுமே போதுமே. 'ஸ்வப்னம்' எதற்காக இருக்கிறது? என்று யோசித்துப் பார்த்தேன். ஈச்வரன் எங்கும் இருக்கிறார், அவர் அத்வைத ப்ரம்மம், எல்லாம் ஆத்ம ஸ்வரூபம் என்பதை நிரூபித்துக் காட்டுவதற்கு த்ருஷ்டாந்தமாகவே இந்த ஸ்வப்னத்தை அவர் உண்டாக்கி இருக்கிறார் என்று தோன்றியது. கனவு காண்பதற்கு வேறு ஒரு பிரயோஜனமும் இல்லை. இந்த லோகம் நமக்குப் பலவாகத்

தோன்றுவது, ஸ்வப்னத்தைப் போல இருக்கிறது. ஸ்வப்னத்தில் என்ன என்னவோ கஷ்டங்களும் ஸுகங்களும் வருவதாகத் தோன்றுகின்றன. ஸ்வப்னம் முடிந்தால் ஒன்றும் இருக்கிறதில்லை. ஸ்வப்னம் பார்த்தபொழுது இருந்ததாகத் தோன்றிய உடம்புகூட இருப்பதில்லை. இப்படி ஸ்வப்னம் கண்டோம் என்று அறிந்துகொண்ட ஒருவன்தான் மிச்சம். இந்த ஒரே ஒருவனின் எண்ணந்தான் கனவுலகில் அவன் கண்ட அத்தனை பேர்களும், அத்தனை வஸ்துக்களும். ஸ்வப்னத்தில் இருந்த இவை எல்லாம் விழிப்பிலே போய்விடுகின்றன. இதே மாதிரி ப்ரபஞ்ச ஸ்வப்னத்திலிருந்து நாம் விழித்துக் கொண்டால், ப்ரபஞ்சத்திலுள்ள சகல வஸ்துக்களும் பொய்யாகப் போய், அவற்றைக் கண்ட அறிவு ஒன்றுதான் மிஞ்சும். ஸத்யமான வஸ்து அதுதான். அதற்குத்தான் அத்வைதம் என்று பெயர்.

ஃ ஃ ஃ

கூரையில் எத்தனை தரம் உடைத்தாலும் பத்து நாளுக்கு ஒரு தரம் கரையான் புற்று தோன்றிக் கொண்டேதான் இருக்கும். கூரை மூங்கிலுக்குள் இருக்கிற தாய்ப் பூச்சியை எடுத்துப் போட்டால்தான் அப்புறம் புற்று முளைக்காது.

ஃ ஃ ஃ

நம்முடைய ஸ்ரீ ஆசார்யர்கள் சத்தியத்தை மூன்று விதமாகப் பிரித்திருக்கிறார்கள். இந்த மூன்றிலும் சேராததையே அசத்தியம் என்று அடியோடு தள்ளி விட்டார்கள். (1) பாரமார்த்திக ஸத்தியம் (2) வியாவஹாரிக ஸத்தியம், (3) பிராதிபாஸிக ஸத்தியம் என்று ஸத்தியத்தை மூன்றாகப் பிரித்தார்கள். (4) அஸத்தியம் என்பது இந்த மூன்றிலும் சேராது.

இவைகளுள் பாரமார்த்திக ஸத்தியம் என்பதுதான் அத்வைதமான பிரம்ம ஸ்வரூபம்.

வியாவஹாரிக ஸத்தியம் என்ன என்றால், நடைமுறையில், விவகாரத்தில் நிஜம் மாதிரி நாம் பார்த்துக் கொண்டிருப்பது. லோக வாழ்க்கை நிஜம் என்று நாம் நினைப்பதுதான் வியாவஹாரிக ஸத்தியம். தகர டப்பியின் மூடி கீழே வெயிலில் கிடந்தால் அது வெள்ளி ரூபாயைப் போலத் தோன்றுகிறது. அது பிராதிபாஸிக ஸத்தியம். கொஞ்ச நாழிகை அப்படித் தோன்றுகிறது. ஆனால் அது உண்மையல்ல. கனவும் இப்படியே. இந்த மூன்று மாதிரியின்றி, ஒருநாளும் இல்லாததுதான் அஸத்தியம். மலடி மகன், குதிரைக் கொம்பு முதலியவை ஒரு நாளும் ஸம்பவிக்காதவை. இவை அஸத்தியம். இதை விகல்பமென்று யோக சாஸ்திரம் சொல்லும்.

**சப்த ஞானானுபாதீ வஸ்து சூன்யோ விகல்ப:**

'மலடிமகன்' என்கிற சப்தம் (வார்த்தை) மாத்திரம் இருந்து, அதற்கான வஸ்து இல்லாதது விகல்பம் என்று சொல்லப்படு

கிறது. இந்த அஸத்தியத்தைத் துச்சமென்றும், அத்யந்த அஸத்தென்றும் சொல்லுவார்கள்.

வைக்கோலால் செய்யப்பட்ட பழுதை சாயங்கால அரை இருட்டில் பாம்பாகத் தோன்றுகிறது. அது பாம்பு என்பது பொய். ஆனால் பாம்பு மாதிரியாகத் தெரிவது நிஜம். அப்படித் தெரியும்போது பொய்யும் நிஜமும் கலந்திருக்கின்றன. கிட்டே போனால் பொய்யாகி விடுகிறது. ஆனால் நடுவில் கொஞ்ச நாழி நிஜம் மாதிரியே இருந்தது. அது பிராதிபாஸிக ஸத்தியம்.

வியாவஹாரிக ஸத்தியமும், பிராதிபாஸிக ஸத்தியமும் உண்மை அறிவு ஏற்படுகிறபோது பொய்யாகிவிடுபவை. உண்மை அறிவு இல்லாதபோது மெய்யாக இருப்பவை. வேதாந்தத்தில் இப்படிப்பட்ட பொய்க்கு மித்யை என்று பெயர். ஒருபோதும் மெய்யாகத் தெரியாதது மட்டுமே அஸத்தியம்.

ஃ ஃ ஃ

நாமெல்லாம் எப்படிப்பட்டவர்கள்? நம் தேஹம் கொஞ்ச நாளுக்கு முன்பு இல்லை, பின்பும் இது இல்லாமல்தான் போகப் போகிறது. ஸத்தியம் இல்லை. கொஞ்ச காலம் இருப்பதால் அஸத்தியமும் இல்லை. முழு ஸத்தியமாக இருந்தால் முக்காலத்திலும் நாசம் அடையாமல் இருக்க வேண்டும். அப் படியும் இல்லை. இது ''சுக்திரூப்யம்'' போன்றது. அதாவது வெயில் அடிக்கும்போது கிளிஞ்சலில் (சுக்தி), வெள்ளி (ரூப்யம்) தோன்றுவதைப் போன்றது. ரூப்யம் என்பது வெள்ளி. அதிலிருந்து ரூபாய் (Rupee) என்ற வார்த்தை வந்தது. கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவது ஸத்தியமா? அஸத்தியமா?

ஃ ஃ ஃ

ஒரே ஆகாசம் எங்கும் நிறைந்திருக்கிறது. ஆகாசம் எல்லாவற்றிற்கும் இடம் கொடுக்கிறது. எங்கும் பரவியிருக்கிற இந்த ஆகாசத்திற்கு 'மஹாகாசம்' என்று பெயர். திறந்த வெளியில் காலியாகப் பல குடங்களை வைத்தால், அவற்றுக் குள்ளும் ஆகாசம்தான் இருக்கிறது. குடத்திற்குள் இருக்கும் ஆகாசத்திற்குக் 'கடாகாசம்' என்று பெயர். கடம் என்றால் குடம். கடம் உடைந்துபோனால் கடாகாசமும் போய்விடுமா? போகாது. கடாகாசமாகத் தனியாகத் தெரிந்தது மஹாகாசத்தில் கலந்துவிடும். கடம் உடையாதபொழுது அந்த ஆகாசம் தனி யாகச் சின்னதாக இருக்கிறதுபோல நமக்குத் தோன்றுகிறது.

உடைந்துவிட்டால் கடாகாசம் மஹாகாசமே ஆகிவிடுகிறது. கடம் இருக்கிற அளவு எதுவோ அதற்குத் தகுந்தபடி இப்படிப் பட்ட பேதங்கள் ஏற்படுகின்றன. அதேமாதிரி பரமாத்மா அந்தந்த மனஸுக்குத் தக்கபடி வித்தியாசமாகத் தோற்றுகின்றார். செம்பிலிருக்கிற ஜலம் பெரிய செம்பாயிருந்தால் பெரிய தாகவும், சின்னச் செம்பாயிருந்தால் சின்னதாகவும் தோற்று கிறது. செம்பை உடைத்துவிட்டால் அந்தப் பேதங்களெல்லாம் போய்விடுகின்றன. அதைப்போல் மனஸ் போய்விட்டால் பேத புத்தியும் போய்விடுகிறது. இப்படிச் சொல்லுவதுதான் அவச் சின்ன வாதம் என்பது. பரமாத்மாவே ஜீவாத்மா மாதிரித் தோன்றுவதை இப்படி இரண்டு விதங்களில் விளக்கியிருக்கிறது.

❖ ❖ ❖

இப்போது பள்ளிக்கூடப் புஸ்தகங்களிலிருந்து ஆரம்பித்து, எங்கேயும் புத்தரைப் பற்றித்தான் சொல்லியிருக்கிறதே தவிர, குமாரில பட்டர், உதயனாசாரியார் முதலானவர்களின் பேர்கள் கூட ஒருத்தருக்கும் தெரியாதபடி செய்திருக்கிறது. வெள்ளைக் காரர்களின் ஆட்சியின்போது இப்படி வேண்டுமென்றே செய்து விட்டார்கள். அவர்களுக்கு வைதிக மதத்தை எப்படியாவது மட்டம் தட்டி, எல்லாரையும் கிறிஸ்துவ மதத்துக்கு இழுத்து விட வேண்டும் என்பது ஆசை. 'கிருஸ்துவ மதத்துக்கு இழுக்க முடியாவிட்டால் கூடப் பரவாயில்லை. வைதிகத்தை எப்படி யாவது மட்டந்தட்டிவிடவேண்டும். நம்மால் ஆளப்படுகிற இந்த ஹிந்துக்களுக்குத் தங்கள் மதத்தையும், கலாசாரத்தை யும் பற்றிப் பெருமிதம் இல்லாமல் பண்ணிவிடவேண்டும்' என்று அவர்களுக்கு எண்ணம். தங்களுக்கு நாகரிகமே தெரி யாத ஆதி காலத்தில் இப்போது தங்களால் ஆளப்படும் ஹிந்துக்கள் மஹோன்னதமான நாகரிகம் படைத்தவர்களாக இருந்தது அவர்களை ரொம்பவும் உறுத்திக் கொண் டிருந்தது. அதனால் இப்படி நினைத்தார்கள். வைதிக மதத்தின் பெருமைகள், அதில் வந்த பெரியவர்கள் ஆகியனபற்றி, ஹிந்துக் களுக்கு ஒன்றுமே தெரியாமல் செய்யும் விதத்தில், எலிமென்டரி ஸ்கூல் பாட கட்டத்திலிருந்து ஆரம்பித்து விட்டார்கள். அதனால்தான் வேதவிருத்தமாக (வேதத்துக்கு முரணாக) புத்தர் மதம் ஸ்தாபனம் செய்ததை மட்டும் குழந்தைகள் படிக்கிற காலத்திலேயே அவர்கள் தெரிந்து கொள்ளும்படியாகப் பெரிசாகப் பிரபலப்படுத்தினார்கள். வேத மதத்தில் வந்த மஹான்களைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் விட்டு விட்டார்கள். குமாரில பட்டர் வேதப் பிராமாண்யத்தை வேதமே பிரமாண நூல் என்பதையும்), வேத கர்மாக்களின்

முக்கியத்துவத்தையும் வலியுறுத்தி, இந்த இனங்களில் மாறுபட்ட பௌத்தத்தைக் கண்டித்தார். உதயனர், பௌத்தர்களின் நிரீச்வர வாதத்தைக் கண்டித்து ஈச்வரன் உண்டு என்பதை நிலைநாட்டினார். கர்மம்-பக்தி- ஞானம் என்ற மூன்றில் இப்படிக் கர்மத்தையும், பக்தியையும் பற்றிய பௌத்தக் கொள்கையை இருவர் நிராகரணம் பண்ணின பிறகே, ஞானமார்க்கத்தை வேத வழிப்படிப் புதுப்பித்துக் கொடுத்த நம் பகவத்பாதாள் அவதாரம் பண்ணினார்.

ஃ ஃ ஃ

அவனைத் தவிர வேறு அடியோடு இல்லை என்பது அத்வைதம். உயிர் என்று, ஜீவாத்மா என்று ஒன்று இருந்தாலும், உயிருக்குயிராக. அந்தர்யாமியாக அவன் ஒருத்தனே இருக்கிறான் என்பது விசிஷ்டாத்வைதம். அவன் வேறு, நாம் வேறு தான்; ஆனால் அவன்தான் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறான் என்பது த்வைதம். த்வைதம்தான் நமக்கு நன்றாகத் தெரிகிறது. தெரிந்ததைப் பிடித்துக் கொண்டோமானால், மேலே மேலே தெரிந்து கொள்ள வேண்டியதை அவனே தெரியப்படுத்துவான். அப்போது அணுவுக்குள் அணுவாக உயிருக்கு உயிராக அவனை அநுபவிப்போம். அப்புறம் '**நாம்**' அநுபவிக்கிறோம்; '**அவனை**' அநுபவிக்கிறோம் என்ற வித்தியாசம் கூட இல்லாமல், அத்வைமாகி விடுவோம். இதெல்லாம் பரமாத்மாவின் அநுக்ரஹத்தினால் நடக்க வேண்டியவை. '**நம்மால்**' நடத்திக் கொள்ள முடிவாகத் தெரிவது, கடமையைப் பண்ணுவது, கூடிய மட்டும் நம்முடைய ஆசைக்காக இல்லாமல், ஈசுவர ஆக்ஞை இப்படி என்று காரியம் பண்ணுவது; அவனிடம் பக்தியோடு இருப்பது; இதுதான். ஸ்வாமியை நினைக்காமல், வெறுமே 'அன்புருவமாக இரு' 'ப்ரேமஸ்வரூபமாக இரு' என்றால், நம்மால் முடியவே இல்லை. காரியம் உள்ளமட்டும் கோபமும், த்வேஷமும் வரத்தான் செய்கின்றன. ஆனால் அன்புருவான ஸ்வாமியிடம் நாம் அன்பு வைத்து, காரியங்களை அவருக்கே அர்ப்பணம் செய்யத் தொடங்கினால், தானாகவே எல்லாரிடமும் அன்பு மயமாகிறோம். இந்த அன்பே பெரிய ஆனந்தம், நிறைவு.

ஃ ஃ ஃ

பூனை குட்டி போட்டால், அக் குட்டியானது தானாகவே நடந்து ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் போகும் சக்தி பெறும்வரையில், அதைத் தாய்ப் பூனையே தன் வாயினால் கவ்விக் கொண்டு தூக்கிச் செல்கிறது. இதே போலத்தான் புலியும். புலிக்குப் பூனை மாமா முறை ஆகவேண்டும்

என்பார்கள். புலிக்கு வேட்டையாடுதல், தாண்டுதல், பதுங்கிப் பாய்தல் ஆகிய எல்லாவற்றையும் பூனை சொல்லிக் கொடுத்த தாம். ஒன்றை மட்டும் சொல்லித் தரவில்லை. தானோ மிகவும் சிறியவன், எல்லாவற்றையும் சொல்லித் தந்தால் தனக்கே ஆபத்து வந்துவிடும் என எண்ணி மரத்தில் ஏறுதல், சுவரில் ஏறுதல் முதலியவற்றைப் புலிக்குச் சொல்லித் தர வில்லையாம். புலிக்கும், பூனைக்கும் தன் குழந்தைகளிடத்தில் வாத்ஸல்யம், பிரியம் அதிகம்.

ஃ ஃ ஃ

பகவான் எல்லாக் குழந்தைகளுக்குமே தாயை மயக்கக் கூடிய சக்தியைத் தந்திருக்கிறார். அப்போதுதான் இக் குழந்தை வாழ வழி உண்டு என்பதாலேயே மாயாவியாகிய பகவான் அதற்கு ஏமாற்றும் வித்தையைச் சொல்லித் தந்திருக்கின்றார். நம் கர்மாவை அநுபவிப்பதற்கு உடம்பு வேண்டும்; அந்த உடம்பு வளர உணவு வேண்டும். இதற்காகவே (நமக்கு இந்த உண்மை தெரியாவிட்டாலும்) நாம் நம் வயிற்றில் ஆகாரத்தைப் போடு கிறோம். உடல் வளர்கிறது. இதற்காக நாக்கு என்ற ஓர் உறுப்பு இருக்கிறது. நாக்கில் நமக்கு ருசி தெரிகிறது. ருசி இல்லையென்றால் நாம் சாப்பிடமாட்டோம். உடலுக்குள் உணவு செல்லாது. ஆகவேதான் நாக்கில் ருசியைக் கொடுத்து அதன் மூலம் உடலானது உணவைப் பெற்றுக் கர்மாவை அநுபவிக்கும்படி பகவான் செய்திருக்கிறார். இவ்வாறெல்லாம் நாம் கர்மாவை அநுபவிக்கப் பண்ணுவதற்காகவே பகவான் பல தந்திரங்கள் செய்திருக்கிறார். பகவான் குழந்தைகளுக்கு மயக்கும் சக்தியைக் கொடுத்து, அதை நாம் பிரியத்துடன் வளர்க்க வைத்து, நம்மை ஏமாற்றுகிறார். ஆனாலும் பகவானின் ஏமாற்று வித்தை சாதாரண மக்களிடம்தான் பலிக்கும். ஞானியை பகவான் ஏமாற்ற முடியாது. ஞானி பகவானையே ஏமாற்றி விடுவான்.

ஃ ஃ ஃ

ஏராள நூல்கள் நம் மத விஷயமாக உள்ளன. நமக்கு அதெல்லாம் வேண்டியில்லை. நாமும் நிறையப் படிக்கிறோம். ஆனால் எல்லாம் தேசாந்திர புஸ்தகங்கள்தான். மில்டன், வேர்ட்ஸ்வொர்த் எழுதினதெல்லாம் நமக்குத் தெரியும். பவபூதி என்ன எழுதினார், ஒட்டக்கூத்தர் என்ன எழுதினார் என்றால் தெரியாது. லூயி டைனஸ்டி, ஃஜார் டைனஸ்டி நமக்குத் தெரியும்; ஸூர்ய வம்சம், சந்திர வம்சம் தெரியாது; ஏன், நம் கோத்ர ரிஷிகள் பேரே தெரியாது. நமக்கு ஸம்பந்த மில்லாதவை கட்டுக் கட்டாகத் தெரியும். ஆனால் எதைக் கண்டு

லோகம் பிரமிக்கிறதோ, அதற்கு ஆதாரமான நம் சாஸ்திரங்களின் பேர் கூடத் தெரியாது. சாஸ்திரக்ஞர்கள் சொல்ல வந்தாலும் நாம் காது கொடுத்துக் கேட்பதில்லை. அசட்டை செய்கிறோம். நம் தேசம் இப்படியொரு ஹீன ஸ்திதியில் இருக்கிறதே என்று ரொம்பவும் வேதனையாக இருக்கிறது.

ஃ ஃ ஃ

இங்கே நம் தக்ஷிண தேசத்தில் பார்த்தாலும், தமிழ் மன்னர்கள் ஏற்படுத்திய கடிகா ஸ்தானம், வித்யா ஸ்தானம் எனப்பட்ட கலாசாலைகளில் சதுர்தச வித்தைகள் போதிக்கப் பட்டிருக்கின்றன. கடலூருக்கும் பாண்டிச்சேரிக்கும் நடுவே 'பாகூர்' என்ற இடத்தில் இருந்த வித்யாசாலை பற்றி கி. பி, 868-ம் வருஷத்திய செப்பேடுகள் ஐந்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதிலே சதுர்தச வித்தைகள் சொல்லிக் கொடுக்கப்பட்டதாக இருக்கிறது. இதேபோல் விழுப்புரத்துக்கும், திண்டிவனத்துக்கும் நடுவில் உள்ள 'எண்ணாயிரம்' என்ற ஊரிலும் 340 மாணாக்கர்கள் படித்த ஒரு வித்யாசாலை இருந்ததாகவும், அங்கே இந்த பிராசீன சாஸ்திரங்களைச் சொல்லிக் கொடுத்ததாகவும் பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்த, முதலாம் ராஜேந்திர சோழனின் சாஸனம் ஒன்றிலிருந்து தெரிகிறது. இப்படிப் பல.

தமிழ் சரித்திரத்தை ரொம்பவும் ஆராய்ச்சி பண்ணி, அதைப் பற்றியே இப்போது கதைகள், நாவல்கள்கூட எழுத ஆரம்பித்திருந்தாலும், நான் விசாரித்துத் தெரிந்து கொண்ட மட்டில் தமிழ் மன்னர்கள் வேதசாஸ்திரங்களை ரொம்பவும் ஆதரித்துப் போஷித்தார்கள் என்பதை மட்டும் யாரும் எடுத்துச் சொல்வதாகத் தெரியவில்லை. Scientific outlook (பட்சபாதமில்லாமல், நடுநிலைமையைச் சொல்வது) என்று பெரிதாகப் பேசுகிறார்கள். ஆனாலும் வாஸ்தவத்தில் அப்படிக் காணோம். வைதிகத்தை எதிர்த்துச் சண்டை போட்ட பௌத்தர்களே, புத்தி வளர்ச்சிக்கும், தர்மவளர்ச்சிக்கும் இந்தப் பதினாலு சாஸ்திரங்கள் அவசியம் என்று கற்றுக் கொடுத்திருக்கிறார்கள் என்றால், இப்போது நம் ஊரின் ஆஸ்திகர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள்கூட (**இப்போது** இவர்கள் வேத சாஸ்திரங்களை அபிவிருத்தி பண்ணாவிட்டால் போகட்டும்) **எப்போதோ** தமிழ் ராஜாக்கள் வேத சாஸ்திரங்களை ஆதரித்து விருத்தி பண்ணினதைக் கூடச் சொல்லக் கூடாது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆக, இப்போது நாம் இருக்கிற ஸ்திதி என்ன என்றால், ''உங்கள் வித்யைகள் என்ன?'' என்று கேட்டால், சொல்லத் தெரியாதது மட்டுமில்லை, வித்தை என்றாலே என்ன என்று தெரியவில்லை, செப்படி வித்தை, மாந்திரீகம், magic தான் வித்தை என்று நினைத்துக்கொண்டிருக்கிறோம்!

வித்யையும் கலையும் ஒன்றே. சந்திர கலை மாதிரி எப்போதும் வளர்ந்துகொண்டேயிருக்கிற அறிவுதான் 'கலா, கலை எனப்படுவது. இப்போது கலை என்றால் டான்சைத்தான் நினைத்துக் கொள்கிறோம்!

இப்படி நாம் இருக்கக்கூடாது; நம்மவரைக் கொஞ்சமாவது நம்மவராக்க வேண்டுமென்றே இந்தப் பதினாலு—அல்லது பதினெட்டு—வித்யைகளைப் பற்றிக் கொஞ்சம் சொல்லலாம் என்று உத்தேசம். நிறையச் சொல்லவில்லை. பேராவது தெரியட்டும் என்று சிறிது சொல்கிறேன். அதனாலேயே சிரத்தை ஏற்படலாம்; மேலே தெரிந்துகொள்ள ஆர்வம் உண்டாகலாம்.

ஃ ஃ ஃ

காண்பது, பார்ப்பது என்பது கண்ணால் செய்கிற காரியத்தை மட்டும் குறிப்பதல்ல. எல்லா உணர்ச்சியையும் அது குறிக்கும். ''ஒருத்தன் வாழ்க்கையில் பல இன்ப துன்பங்களைக் **கண்டான்**'' என்று சொல்கிற இடத்தில், '**கண்டான்**' என்றால் கண்ணால் பார்த்தான் என்று மட்டுமா அர்த்தம்? 'அநுபவித்தான்' என்பதுதானே அதன் பொருள்? 'மந்த்ர த்ரஷ்டா' என்றாலும், இப்படியே அநுபவத்தில் தெரிந்து கொண்டதாக வைத்துக் கொள்ளலாம்.

ஃ ஃ ஃ

பதினான்கு உலகங்களும் ஒரு ராஜ்யம். இந்த ராஜ்யத்திற்கு ஒரு சக்ரவர்த்தி. அந்த சக்ரவர்த்திக்கு எல்லா ஜீவ ராசிகளும் பிரஜைகள். ராஜ்யமும் அநாதி, சக்ரவர்த்தியும் அநாதி. ராஜ்யமும், சக்ரவர்த்தியும், பிரஜைகளும் இருந்தால் அதற்கு ஒரு சட்டம் வேண்டும். இவைகள் எல்லாம் அநாதியானால், சட்டமும் அநாதி. அந்த அநாதி சட்டமே வேதம். இவற்றில் ராஜ்யமான பிரபஞ்சத்தை 'அநாதி' என்றாலும், அவ்வப்போது அதற்கு உற்பத்தி உண்டு; அழிவும் உண்டு. சக்ரவர்த்தியான பரமாத்மாவும், சட்டமான வேதமுமே சாச்வதம்.

வேதாத்யயனம் ஒரு மந்திர யோகம். ஒவ்வொரு நாடி அசைவதினால் சித்தத்திற்கு ஒவ்வொரு விதமான விகாரங்கள் ஏற்படுகிறது. சில நாடி அசைவுகளால் காம விகாரங்களும், சில நாடிகளால் சோம்பல் விகாரங்களும், சில நாடிகளால் சோக விகாரங்களும் உண்டாகின்றன. இதை மாற்றிச் சொன்னால் காம விகாரம் ஏற்படும்போது சில நாடிகளில் அசைவும், கோப விகாரத்தின்போது சில நாடிகளில் அசைவும், இப்படியே ஒவ்வொரு உணர்ச்சிக்கும் ஒரு விதமான நாடி அசைவும் உண்டாகின்றன. இவை பிரத்யக்ஷமாகவே அநுபவத்தில் காணப்படுகின்றன. சாந்தம் ஏற்படும் போது முகத்தில் ஒரு களை உண்டாகிறது. அந்த களை, சில நாடிகள் குளிர்ந்ததன் பலனேயாம். இப்படியே காமம், குரோதம் ஒவ்வொன்றும் 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்றபடி முகத்திலேயே பிரதிபலிக்கின்றன. நாடி சலனம்தான் இந்த அடையாளங்களை உண்டாக்குவது. இவ்விதம் மனோ விகாரங்களால் நாடிகளில் சில விகாரங்கள் ஏற்படுவதால், அந்த நாடிகளை வசப்படுத்திவிட்டால், காமக்குரோதங்களையோ, சாந்தத்தையோ நமது இஷ்டப்படி வரவழைத்துக் கொள்ளலாம். அதற்கு வெளிப் பொருள்கள் தேவையில்லை. இப்படி நாடிகளை ஸ்வாதீனப்படுத்த ப்ராணாயாமத்தை முக்கியமாகக் கொண்ட ராஜயோகம் ஒரு மார்க்கம். அதே விதமாய் மந்திரயோகமும் ஒரு மார்க்கம். ஒரு எழுத்தை நாம் உச்சரிக்கும் போது, நமது நாக்கு, உதடு, மேல்வாய், கீழ்வாய், கண்டம் முதலியவைகளில் இடைவெளி வழியாக ப்ராணவாயு வெளிப் படுகிறது. அப்பொழுதுதான் அக்ஷரத்வனி உண்டாகிறது. அந்த அக்ஷரத்வனிக்குக் காரணமாக எந்தெந்த உறுப்புக்களில் ப்ராண வாயு சஞ்சரிக்கிறதோ அந்தந்த இடம் ஸம்பந்தப்படும் நாடி களில் சலனம் ஏற்படுகிறது. நாடிகளின் சலனத்தினால் மனஸில் ஒவ்வொரு விதமான விருத்திகள் ஏற்பட்டு இகலோக க்ஷேமமும், பரலோக க்ஷேமமுமாகிய மோக்ஷம் முதலிய புண்யமும் ஏற்பட வேண்டுமோ, அதற்கு அநுகுணமாக உள்ள உச்சாரணங்களை மாத்திரம் வைத்துக்கொண்டு, வேறு விதமான உச்சாரணங்களை விலக்கி அமைத்தனவே வேத மந்திரங்கள்.

ஃ ஃ ஃ

தமிழில் அநேக உத்தமமான ஸ்தோத்திரங்கள் இருக் கின்றன. அவற்றைப் படித்தால் மனஸ் உருகுகிறது. ஆனாலும் குறிப்பிட்ட பிரயோஜனம் வேண்டுமென்றால், அதில் சிலதை

மட்டும்தான் உருவேற்றுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். திருமுருகாற்றுப்படை, வியாதி தீருவதற்கென்று ஒரு திருப்புகழ் (''இருமலுரோக''), தேவாரத்தில் மழை வேட்டல் பதிகம் என்றிப்படி சிலதை மட்டும் விசேஷமாகப் பல ஆவிருத்தி ஜபிக்கிறோம். இதே நக்கீரரும், அருணகிரிநாதரும், சம்பந்த மூர்த்திஸ்வாமிகளும் இவற்றைவிட நெஞ்சை உருக்கும்படியான வேறு ஸ்தோத்திரங்கள் பண்ணியிருக்கக் கூடும். ஆனால் அவற்றைவிட்டு இவற்றை மட்டும் ஏன் எடுத்துக் கொள்கிறோமென்றால் சப்த விசேஷந்தான். இந்தப் பாடல்களில் உள்ள சப்தங்களுக்கு மந்திரசக்தி இருக்கிறது. ஆசார்யாளேதான் ''ஸௌந்தர்ய லஹரி,'' ''சிவானந்த லஹரி'' இரண்டும் செய்திருக்கிறார். ஆனால் ''ஸௌந்தர்ய லஹரி''யில் ஒவ்வொரு சுலோகத்தை ஜபிப்பதற்கும் ஒவ்வொருவிதமான பலன் சொல்லியிருக்கிற மாதிரி, சிவானந்த லஹரிக்குச் சொல்லவில்லை. காரணம் என்னவென்றால் சப்தங்களுக்கே உள்ள மந்திர சக்திதான்.

ஃ ஃ ஃ

ஒரே கடவுள்தான். ஒரே ஸத்வஸ்துதான் அத்தனை தேவதைகளாகவும் ஆகியிருக்கின்றதென்று வேதத்தில் அழுத்தந் திருத்தமாகச் சொல்லியிருக்கிறது. ஒவ்வொரு தேவதையைப் பற்றிச் சொல்லும்போதும், அதுவே பரமாத்மா என்று சிலாகித்துச் சொல்லி இருப்பதாலும், வேதம் ஒரே கடவுள் கொள்கை (monotheism) உடையதுதான் என்று தீர்மானம் ஆகிறது. பல தேவதைகளைச் சொல்லியிருப்பதால், 'வேதம் பலகடவுள்கள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறது. Polytheism-ஐச் சொல்கிறது' என்று நினைப்பது பிசகு. ஒரே கடவுள் பல தேவதைகளாகியிருப்பதைத்தான் அதுசொல்கிறது. பிரபஞ்ச வியாபாரத்தை நடத்துவதற்காக ஒரே பரமாத்மாதான் இந்தத் தேவதைகள் என்ற அதிகாரிகளை உண்டாக்கியிருக்கிறார். 'இயற்கை' என்று நாம் சொல்கிறதில் உஷ்ணம், மழை, காற்று, உணவு, ஸந்ததி, செல்வம், மநுஷ்யனின் உணர்ச்சிகள் முதலான பல விஷயங்களையும் நிர்வாகம் பண்ணுவதற்காக இந்தத் தேவதைகளை நியமித்திருக்கிறார். நம்மைப் படைத்தது போலவே தேவதைகளையும் படைத்திருக்கிறார், நம்மைத் தன்னிலிருந்தேதான் படைத்தார். அதாவது அவரேதான் நாமாக ஆனார். அதனால்தான் ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றே என்று அத்வைதத்தில் சொல்வது. இதே மாதிரி தேவர்களாகவும் அவரேதான் ஆகியிருக்கிறார். ஆனாலும் நாம் அத்

வைதத்துக்கு நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்கிறவரையில், நம்மை வேறு வேறாக நினைத்துக் கர்மாக்களைப் பண்ணி நமக்குள் பரஸ்பர ஸஹாயம் செய்து கொள்வதால், தேவர்களையும் தனித் தனியாக நினைத்து, அவரவர்களுக்குரிய யக்ஞ ஆராதனையைப் பண்ணத்தான் வேண்டும் என்பது வேதம் போட்ட சட்டம். லோக வாழ்க்கை நமக்கும், ஸகல ஜீவ குலத்துக்கும் அநுகூலமாக இருக்க வேண்டுமானால், பிரபஞ்ச சக்திகளைப் பரமாத்மாவின் உத்தரவின்படி நிர்வாகம் பண்ணிவரும் தேவதைகளின் அநுக்ரஹம் நமக்கு இருக்கவேண்டும் என்று சொல்லி, அவர்களின் அநுக்கிரஹத்தைப் பெற்றுத்தரவே அவர்களுக்குப் பிரீதியாக யக்ஞங்களைப் பண்ண வேண்டுமென்று வேதம் சொல்கிறது. ஞானம் வந்தபின் இந்த தேவர்கள் வேண்டாம். நேராகப் பரமாத்மாவை உபாஸிக்கலாம். ஆனால் த்வைதப் பிரபஞ்சத்திலிருந்து கொண்டே, இதிலிருந்து விடுபடுவதற்கான முயற்சிகளை நாம் செய்கிற காலத்தில், வேறு வேறாகத் தேவதைகளையும் உபாஸிக்கத்தான் வேண்டும் என்று வைத்திருக்கிறது.

ஃ ஃ ஃ

மிருகங்களில் பூனையைவிட நாய், நாயைவிடக் குதிரை, குதிரையைவிட யானை, யானையைவிடச் சிங்கம் என்று ஒன்றைக் காட்டிலும் இன்னொன்று அதிக சக்தி உடையதாக இருக்கிறதல்லவா? இப்படியே சிருஷ்டியில் மநுஷ்யர்களைவிட அதிக சக்தி உடையவர்களும் இருக்கிறார்கள். அவர்களையே தேவர்கள் என்பது. அவர்கள் இந்த லோகத்தில் பஞ்ச பூதங்களில் கரைந்து இருப்பதோடு, கண்ணுக்குத் தெரிகிற ரூபத்தில் தேவ லோகத்தில் இருந்து கொண்டிருக்கிறார்கள். மந்திரங்களை நன்றாக ஜபித்து ஸித்தி அடைந்தால், ஸூக்ஷ்ம ரூபத்தினால் அவர்கள் செய்கிற அநுக்ரஹங்களைப் பெறுவதோடு, தேவலோகத்தில் அவர்களுக்குள்ள ஸ்தூல ரூபங்களையும் தரிசனம் பண்ணலாம். இந்த மந்திரங்களுக்கு ஆதாரமான மூல சப்த சலனங்களால் தான் அவர்கள் பரமாத்மாவில் தோன்றியது. எனவே, இதையே திருப்பிச் சொல்வதானால், மந்திரங்களைத் தேவதைகளின் சப்த ரூபம் என்று சொல்லலாம்.

ஃ ஃ ஃ

யாகம் பண்ணுகிறவர்களைப் பற்றிக் கொஞ்சம் சொல்ல வேண்டும். எவன் பொருளைச் செலவழித்து தக்ஷிணை கொடுத்து

யக்ஞம் செய்கிறானோ அவனுக்கு, 'யஜமானன்' என்றுபெயர். 'யஜ்' என்றால் 'வழிபடுவது' என்று அர்த்தம். யஜமானன் என்பதற்கு Root meaning—யக்ஞம் பண்ணுபவன் என்பதே. இப்போது நம் தமிழ் தேசத்தில் முதலாளியை 'யஜமான்' என்கிறோம். முதலாளி தானே சம்பளம் தருகிறான்? அதனால் யக்ஞத்திலே தக்ஷிணை கொடுத்து வந்த யஜமானின் ஸ்தானத்தில் இவனை வைத்து விட்டோம். சாதாரண மக்களும் இப்படி முதலாளியை யஜமான் என்பதிலிருந்து, இந்த தேசத்தில் வேத வழக்கம் எவ்வளவு ஆழ வேரோடி இருக்கிறது என்று தெரிகிறது.

இன்னொரு வார்த்தையும் நம் தேசத்தின் ஆழ்ந்த வைதிகப் பிடிமானத்தைக் காட்டுகிறது. தமிழ் நாட்டில் ஒருத்தனுக்கு இலவசமாகச் சாப்பாடு போடுகிற இடத்துக்கு 'சத்திரம்' என்று பேர் சொல்கிறோம். வடக்கே போனால் சத்திரம் என்று சொல்ல மாட்டார்கள். 'தரம் சாலா' என்பார்கள். 'தர்ம சாலை' என்பதன் திரிபு அது. இங்கே தக்ஷிணத்தில் மட்டும் ஏன் சத்திரம் என்கிறார்கள்? சத்திரம் என்றால் என்ன? 'ஸத்ரம்,' என்பதுதான் 'சத்திரம்' ஏன்றாயிருக்கிறது. 'ஸத்ரம்' என்பது ஒருவகை யாகத்தின் பெயர். அந்த யாகத்திற்கும் மற்ற யாகங்களுக்கும் என்ன வித்தியாசம் என்றால், மற்ற யாகங்களில் யஜமானன் என்கிற ஒருவன், தன் திரவியத்தைச் செலவு செய்து தக்ஷிணை கொடுத்து, யாகம் பண்ணுகிறான். ரித்விக்குகள் என்ற பிராம்மணர்கள்(புரோஹிதர்கள்)யஜமானிடம் தக்ஷிணை வாங்கிக் கொண்டு அவனுக்காக யக்ஞத்தை நடத்தித் தருகிறார்கள். ஸத்ர யாகங்களில் மட்டும் யாகம் பண்ணும் அத்தனை பேருமே யஜமானர்கள். ஒரு யக்ஞத்தினால் லோக க்ஷேமமும், அதில் கலந்துகொள்கிற எல்லோருக்கும் சித்த சுத்தியும், அதைத் தரிசிப்பவர்களுக்குக்கூட நன்மையும் ஏற்படுகின்றன என்றாலும், இதனால் விசேஷமாகப் புண்ணியம் அடைவது யஜமானன்தான். ஸத்ர யாகங்களில் ரித்விக்குகளே யஜமானர்களாக இருப்பதால், அத்தனை பேருக்கும் சமமான புண்ணியம். இந்த யக்ஞம் தன்னுடையது என்ற உரிமை எல்லோருக்கும் இருக்கிற ஸோஷலிச யக்ஞம் இது. இதை வைத்தே எவரானாலும், உரிமையோடு வந்து யஜமானர்கள் மாதிரி வயிறாரச் சாப்பிட்டுவிட்டுப் போகிற இடத்துக்குச் 'சத்திரம்' என்று பேர் வந்து விட்டது. இந்த வார்த்தையிலிருந்து, சத்திரத்தில் சாப்பிடுகிறவனை விடச் சாப்பாடு போடுகிறவன் தன்னை உயர்வாக நினைக்கவில்லை என்ற உயர்ந்த பண்பும் தெரிகிறது. தமிழ் நாட்டில் 'ஸத்ர' யாகங்கள் விசேஷமாக நடந்திருக்க வேண்டுமென்றும் தெரிகிறது.

ꟹ ꟹ ꟹ

நம்முடைய வீட்டு வேலைக்காரன் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு ஸ்வல்ப சம்பளம் கொடுத்து வருகிறோம். வேறு புது வேலைக்காரன் வந்தால் அதிகச் சம்பளம் கொடுக்க வேண்டும். நமது வேலைக்காரன் மேலே பரீக்ஷைகளில் பாஸ் பண்ணி, வேறு வேலைக்குப் போய் விருத்தியாக எண்ணுகிறான். பரீக்ஷைக்குப் போகிறான். நாம் அவன் பரீக்ஷையில் தேற வேண்டும் என்று நினைப்போமா? மாட்டோம். தேறக் கூடா தென்றுதான் நினைப்போம். தேறிவிட்டால், அவனுக்குக் கௌர வம் வந்துவிடும்; வேறு வேலைக்குப் போய் விடுவான்; அவன் போய் விட்டால், அவனைப் போல் ஸ்வல்ப சம்பளத்தில் ஒரு வேலைக்காரனும் நமக்குக் கிடைக்கமாட்டான். இதைப் போலத்தான் இங்கேயும் இருக்கிறது. மநுஷ்யன் ஞானியாக உயர்ந்து தங்கள் உபாஸனையை விட்டுவிடுவது தேவர்களுக்குப் பிடித்தமில்லை.

ஞானி தேவர்களுக்குப் பிரியமில்லாதவன் என்றால், ஞானி யாக இல்லாதவன்தான் அவர்களுக்குப் பிரியன் என்றாகிறது. ஆகையால் தேவர்களுக்குப் பிரியமானவன் அஞ்ஞானி, அறியாத வன் என்றாகிறது. அதனால்தான், மூர்க்கன் என்பதற்கே 'தேவனாம் ப்ரியன்', அதாவது, தேவர்களுக்குப் பிரியமானவன் என்று வியாகரணத்தில் இன்னொரு பெயர் கொடுத்திருக்கிறது. இந்தப் பெயருக்கு உபநிஷத்தில் மூலம் இருக்கிறது.

∴ ∴ ∴

ஜ்வர தாபம், தாப ஜ்வரம் என்றெல்லாம் சொல்கிறோ மல்லவா? 'தாபம்' என்றால் கொதிப்பது, வேகிறது என்று அர்த்தம். 'தபஸ்', 'தாபம்' என்ற இரண்டுக்கும் root—ஆன 'தப' என்னும் வார்த்தைக்குக் 'கொளுத்துவது' என்று அர்த்தம். ஸூர்யனுக்குத் 'தபனன்' என்றே பேர் இருக்கிறது. ஆகையால் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற தபஸை நாம் பண்ணாவிட் டாலும், தானாக வந்த இந்த ஜ்வர தாபத்தையே நம் பாபத் தைப் போக்குவதற்காக, ஈச்வரனே தந்திருக்கிற தபஸ்தான் என்று வைத்துக்கொண்டு விடவேண்டும்.

மலேரியா வந்து, எத்தனை கம்பளி போர்த்தினாலும் போதா மல் குளிர் நடுக்கி எடுக்கிறதா? 'ரொம்ப நல்லது! நாம் குளிர் காலத்தில் ஐஸ¨க்குள் இருந்து தபஸ் பண்ணமாட்டோமோல் லியோ? அதனால் தான் பரம கருணையோடு பகவானே நமக்கு இந்தக் குளிர் ஜ்ஊரத்தை அனுப்பி இருக்கிறார் என்று வைத்துக் கொண்டு விடவேண்டும்.

டைபாய்ட், நிமோனியா மாதிரி வந்து 105°, 106° என்று உடம்பை வறுத்து எடுக்கிறதா? 'அப்பாடா! நாம் பஞ்சாக்னி தபஸ் பண்ணுததற்கு பதிலாகத்தான், ஸ்வாமி இந்த தாப ஜ்வரத்தைத் தந்திருக்கிறார்' என்று நினைத்து நிம்மதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இப்படி எந்த உடம்பு (நோய்) வந்தாலும், அடிபட்டாலும், காயம் பட்டாலும் ஒவ்வொன்றையும் ஒரு தபஸாக—நாமாகப் பண்ணுத போதிலும் பகவானே அனுப்பி வைத்திருக்கிற தபஸாக—எடுத்துக்கொண்டு விடவேண்டும்.

பழகப் பழக இந்த மனோபாவம் உறுதியாக ஏற்பட்டு விடும். இதனால் நோய் நொடியைத் தாங்கிக் கொள்கிற சக்தி உண்டாகும். டாக்டர், மருந்து என்று தேடி ஓடாமல் 'ஆகிறபடி ஆகட்டும்' என்று அதன் வழி விட்டுவிடுவோம். பாப கர்மாவைத் தீர்க்க வைக்கிற, ஒரு நல்ல உபாயமாக நம்மைத் தேடி வந்திருக்கிற தேக சிரமத்தை, நாமாகப் போக்கிக் கொள்ள மாட்டோமில்லையா? இதனால் doctor fees, மருந்துச் செலவு எல்லாமும் லாபம். எல்லாவற்றையும் விடப் பெரிய லாபம், சிரமத்தைச் சிரமமாக நினைக்காத 'திதிக்ஷை' என்ற உயர்ந்த பண்பைப் பெற்றுவிடுவோம்.

∴ ∴ ∴

கல்யாணம் ஆகவேண்டிய பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய பெற்றோர், பந்துக்களுக்குள்ளேயே முறைப்பையனைப் பார்த்து, அவனுக்கு அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கத் தீர்மானித்திருந்தார்கள். ஆனால் அந்தப் பெண், 'புருஷர்களில் எல்லாம் உயர்ந்தவன் எவனோ, அவனைத்தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்' என்று பிடிவாதம் பண்ணினாள். அவர்களும், 'உன் இஷ்டப்படியே போ' என்று விட்டுவிட்டார்கள்.

அந்தப் பெண், 'புருஷர்களுக்குள்ளேயே உயர்ந்தவன் ராஜாதான். கல்யாணம் பண்ணிக்கொண்டால் அவனைத்தான் கல்யாணம் 'பண்ணிக்கொள்வேன்' என்று தீர்மானம் பண்ணிக் கொண்டு, அவ்வூர் ராஜா பின்னாலேயே போய்க்கொண்டிருந்தாள்.

ஒரு நாளைக்கு ராஜா பல்லக்கில் போய்க்கொண்டிருந்த போது, ஒரு சாமியார் எதிரே வந்தார். 'ராஜா பல்லக்கை

விட்டுக் கீழே இறங்கி, அந்தச் சாமியாருக்கு நமஸ்காரம் பண்ணி விட்டுத் திரும்பவும் பல்லக்கில் ஏறிக்கொண்டு போனான்.

இதை அந்தப் பெண் பார்த்தாள். 'அடடா, ராஜாதான் புருஷர்களுக்குள் உயர்ந்தவன் என்று எண்ணி இத்தனை நாளும் ஏமாந்து போய்விட்டேனே! ராஜாவைக் காட்டிலும் உயர்ந்தவர் சாமியார் போல் இருக்கிறதே! கல்யாணம் பண்ணிக் கொண்டால் இந்தச் சாமியாரைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும்' என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு, அந்தச் சாமியார் பின்னாலேயே சுற்ற ஆரம்பித்து விட்டாள்.

சாமியாரோடு போகும்போது, ஒரு நாள் அவர், தெருக் கோடியில் ஓர் ஆலமரத்தடியில் இருந்த பிள்ளையாருக்கு முன் நின்று குட்டிக் கொண்டு, தோப்புக்கரணம் போடுவதை அவள் பார்த் தாள். ''சாமியாரைவிடப் பெரியவர், உயர்ந்தவர் இந்தப் பிள்ளையார்தான். அதனால் பிள்ளையாரைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும்'' என்று தீர்மானம் பண்ணிக் கொண்டாள். சாமியாரோடு போகாமல் அந்தப் பிள்ளையாருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து விட்டாள்.

அவளைத் தவிர அந்தப் பிள்ளையாரிடம் யாரும் அடிக்கடி வருகிற இடமாக அது இல்லை. அது கோயில் கூட இல்லை; வெறும் மரத்தடிதான். அதனால், தெருவோடு போகின்ற நாய் ஒன்று அந்தப் பிள்ளையார் மேலே காலைத் தூக்கிக் கொண்டு ஒன்றுக்குப் போயிற்று. அதைப் பார்த்தவுடன். 'அடடா, இந்தப் பிள்ளையாரையும் விட உயர்ந்தது இந்த நாய்தான்' என்று, அந்த நாயைத் துரத்திக்கொண்டு, அவள் போக ஆரம்பித்து விட்டாள்.

தெருவில் ஓடுகிற அந்த நாயை, ஒரு பையன் கல்லால் அடித்தான். அது 'வள் வள்' என்று குரைத்துக்கொண்டு ஓடி விட்டது.

'ஏண்டா, அந்த நாயை அடித்தாய்?' என்று அந்தப் பையனை, ஒருவன் பிடித்துக்கொண்டு அதட்டினான்.

'நாயைக் காட்டிலும், நாயை அடித்தவன் பெரியவன் என்று எண்ணினேன். அடித்தவனையே திருப்பி அடிக்கிற. இவன்தான் உயர்ந்தவன்' என்று தீர்மானம் பண்ணிவிட்டாளாம் அந்தப் பெண்.

கடைசியில் கண்டுபிடித்த அந்தப் பிள்ளை தான், அவளுடைய அப்பா, அம்மா அவளுக்குத் தீர்மானம் பண்ணியிருந்த பிள்ளை. 'வெகு தூரத்தில் யாரோ இருக்கிறான், இருக்கிறான்' என்று எண்ணிக்கொண்டே சுற்றினாள். கடைசியில் அவன் அவளுக்கு அருகிலேயே இருந்தவனாகப் போய்விட்டான். இப்படி லௌகிகமாக ஒரு கதை சொல்வது உண்டு.

'எங்கோ தூரத்தில் இருக்கிறான் ஸ்வாமி என்று ஊரெல்லாம் சுற்றுகிறாயே! தெரியாத வரையில் அவன் தூரத்தில் இருப்பவன்தான், ஊரெல்லாம் சுற்றினாலும் அவனைப் பார்க்க முடியாது. அவன் உன்கிட்டேயே இருப்பவன்தான். **தூராத் தூரே அந்திகே ச**—தூரத்திற்கெல்லாம் தூரம், சமீபத்திற்கெல்லாம் சமீபம்' என்று ச்ருதி சொல்கிறது.

∴ ∴ ∴

புளியங்கொட்டை முளைக்கிறபோது பார்த்தால் தெரியும். முளை கண்டவுடன் அந்த விதையை இரண்டாகப் பிளந்து பார்த்தால், அதற்குள் ஒரு மரமே இருப்பது தெரியும். பெரிய மரமாக வளரக் கூடிய சக்தி அதனிடத்திலேயே இருக்கிறது. எல்லா விதைகளிலும் அப்படியே இருக்கும் என்றாலும், புளியங்கொட்டையில்தான் நன்றாக நாம் பார்க்கமுடியும்.

∴ ∴ ∴

பெரிய நிலைக் கண்ணாடியை வைத்துவிட்டு அதில் பார்க்கிறோம். நம் உருவம் அதில் தெரிகிறது. நான்கு நிலைக் கண்ணாடிகளை வரிசையாக வைத்துவிட்டுப் பார்த்தால் ஆயிரம் உருவங்கள் தெரிகின்றன. அந்த ஆயிரத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறவன், ஆயிரத்துக்கும் மூலமான ஒரே ஒருவன்தான். இப்படி இத்தனைகோடி ஜீவர்களுக்கும் உள்ளே இருந்து, 'இது இது' என்று பார்த்துக் கொண்டிருக்கிற ஒரே ஒருத்தன்தான் ஸ்வாமி. பார்க்கிற பொருள்தான், பார்க்கப்படுகிற வஸ்துக்களுக்கெல்லாம் மூலம். அந்த மூலம் என்பது அறிவுதான். அறிவு என்பதே எல்லா ஜகத்திற்கும் காரணம். அந்த அறிவு எங்கே இருக்கிறது? உன்னிடமே இருக்கிறது. அகண்டமாக (பிரிவில்லாததாக) இருக்கக்கூடிய இது, உன்னிடம் கண்டமாகத் (பிரிந்ததாக) தோன்றுகிறது.

ஃ ஃ ஃ

மந்திரங்களை நாம் விடுவதால், மந்திரங்களுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. நமக்குத்தான் நஷ்டம். மைசூரிலிருந்து காவேரி வருகிறது. வெளி தேசத்திலிருந்து உயிரைக் காப்பாற்றக்கூடிய ஒரு மருந்து வருகிறதென்றால், 'அதெல்லாம் வேண்டாம், உள்ளூர் ஜலம் கிடைத்தால்தான் குடிப்போம்; உள்ளூர் மருந்தானால்தான் சாப்பிடுவோம்' என்று உயிரை விடுவார்களா? நமக்குப் பெரிய ரக்ஷையாக இருக்கிற மந்திரங்களில் பாஷையைக் கொண்டுவந்து, அந்நியம் என்று ஒதுக்குவது இப்படித்தான். வாஸ்தவத்தில் அது அந்நியமும் இல்லை, நம்மோடு அந்நியோந்நியமாக ஆதிகாலத்திலிருந்து கரைந்தது தான்.



ஃ ஃ ஃ

நாஸ்திகம் என்றால் ஸ்வாமி இல்லை என்று சொல்கிற நிரீச்வரவாதம் என்றுதானே இப்போது நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம்? இது தப்பு. ஸ்வாமி இல்லை என்று சொல்லிக்கொண்டே கூட ஆஸ்திகர்களாக இருக்க முடியும். அப்படிப் பலபேர் இருந்திருக்கிறார்கள். 'இதுஎன்னவேடிக்கையாக இருக்கிறது? அப்படியானால் ஆஸ்திகம் என்றால் என்ன?' என்றால், ஆஸ்திகம் என்றால் **வேதத்திலே நம்பிக்கை இருப்பது** என்றுதான் அர்த்தம். ஸ்வாமியிடம் நம்பிக்கை இல்லாவிட்டால் கூடப் பரவாயில்லை; வேதசப்தங்களின்மந்திரசக்தியில் நம்பிக்கை வைத்து, யக்ஞாதி அநுஷ்டானங்களைப் பண்ணிவிட்டாலும் அது ஆஸ்திகம் தான். 'வேதங்கள் ஒன்றேயான ஈசுவரனைச் சொல்லவில்லை. பல தேவதைகளைத்தான் சொல்லியிருக்கிறது. அவர்கள் மநுஷ்யர்களைப் போன்ற ஒரு இனந்தான், பரமாத்ம தத்துவத்தின் ரூபங்கள் இல்லை. ஆனாலும் இவர்களைத் திருப்தி பண்ணினால் க்ஷேமம் உண்டாகும்' என்று அரை குறையாகப் புரிந்துகொண்டு, வேத கர்மானுஷ்டானம் பண்ணுகிறவன் கூட ஆஸ்திகன்தான். 'வேத கர்மாக்களைப் பரமேஸ்வர அர்ப்பணமாகச் செய்யாமல், அதன் பலனுக்காகவே பண்ண வேண்டும்" என்கிற கொள்கையைப் பின்பற்றின கர்ம மீமாம்ஸகர்களை ஆஸ்திகர்கள் என்றே கருதுகிறோம். அவர்கள் வேதத்துக்குச் செய்துகொண்ட அர்த்தம் தப்பாகவே இருக்கட்டும். ஆனாலும் வேதம்தான் தர்ம பிரமாணம் என்று நம்பியிருக்கிறார்களல்லவா? அதனால்தான் அவர்களை ஆஸ்திகர்களோடு சேர்த்தது. இதே சமயத்தில் பாசுபதம், பாஞ்சராத்ரம் முதலான சைவ, வைஷ்ணவ சம்பிரதாயங்களில் வேதத்துக்கு விருத்தமான (முரணான) விஷயங்கள் இருப்பதாக ஒருத்தருக்குத் தோன்றினால்,

இந்த மதங்கள் வேதத்தின் பிராமாண்யத்தை (பிரமாணமாக இருக்கும் அதிகாரத்தை) ஆட்சேபிப்பதாகத் தோன்றினால், அவர் இப்படிப்பட்ட சம்பிரதாயங்களைப் பின்பற்றி ஓயாமல் சிவனையோ, விஷ்ணுவையோ பூஜை பண்ணுகிறவரைக் கூட நாஸ்திகர்களுடனே சேர்த்துவிடுவார். பழைய காலப் புஸ்தகங்களில் இப்படித்தான் இருக்கிறது. இப்படியே சாக்த தந்திரங்கள் ஒருவருக்கு அவைதிகமாகத் தோன்றினால், அவர் சாக்தர்களை நாஸ்திகர்களோடு சேர்த்துவிடுவார்.

∴ ∴ ∴

சமணர் என்றால் ஜைனர்கள். 'ஜினர்' என்கிற மஹாவீரரைப் பின்பற்றுவதால் 'ஜைனர்' என்ற பேர் உண்டாயிற்று. 'ச்ரமணர்' என்ற வார்த்தை தமிழில் சமணர் என்றாயிற்று. 'ச்ர' என்ற ஸம்ஸ்கிருதக் கூட்டு எழுத்து தமிழில் உதிர்ந்து வெறும் 'அ' வாக ஆகிவிடும். 'ச்ராவணம்' என்பது இப்படித்தான் 'ஆவணி' என்றாயிருக்கிறது. சங்கரன், சட்டி என்பதிலெல்லாம் வரும் 'ஸ' (sa) சப்தம், தமிழில் சில இடங்களில் 'அ' ஆகிவிடும். 'சமர்' (யுத்தம்) என்பது 'அமர்' என்று வருகிறது. யுத்த களம்தான் 'சமர்க்களம்' என்பது. அதை அமர்க்களம் என்கிறோம். சரீரத்தை ரொம்பவும் சிரமப்படுத்தி, கடினமான விரதங்களை அநுஷ்டிப்பதால், ஜைனர்களுக்கு 'ச்ரமணர்' என்று பேர். அது தமிழில் 'சமணர்' என்றும் அமணர் என்றும் ஆகிறது. ஜைனர்களில் 'ச்வேதாம்பர்' என்ற பெயரில் வெள்ளை வஸ்திரம் கட்டிக் கொள்பவர்கள் உண்டு. இல்லாது போனால் திகம்பரர்களாக, நிர்வாணமாகவே இருப்பார்கள். இதனால்தான், துணி கட்டிக் கொள்ளாத எவனையுமே அமணனாகச் சொல்லி 'அம்மணக்கட்டை' என்கிறோம்.

∴ ∴ ∴

சங்கர பகவத்பாதாள் அவதாரம் பண்ணின இந்த நம்பூதிரி வம்சத்தில் இன்றைக்கும் வைதிக சிரத்தை அடியோடு போய்விடாத பெருமை இருக்கிறது. பல தர்மங்கள் தலைவிரித்தாடிய சமயத்தில், வேத தர்மத்தை மீண்டும் ஸ்தாபிப்பதற்காகவே அவதாரம் செய்ய நினைத்த பரமேச்வரன் இருப்பதற்குள் எங்கே வேத அத்யயனமும், அநுஷ்டானமும் நிறைய இருக்கிறது என்று தேடிப் பார்த்தே, கேரளத்தில், காலடியில் ஒரு நம்பூதிரி குடும்பத்தில் அவதாரம் பண்ணினார் என்று சொல்லியிருக்கிறது. அவர் காலத்தில் மலையாள மொழியே தோன்றியிருக்கவில்லை, தமிழ் மொழிதான் அங்கும்

இருந்தது. ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளின் அத்யந்த ஸகாவான சேரமான் பெருமாள் நாயனார் காலத்தில் கூட மலையாளம் தமிழ் பாஷை பேசின சீமையாகத்தான் இருந்திருக்கிறது. அவர் தமிழில்தான் 'திருக்கைலாய ஞான உலா' பாடி இருக்கிறார். அவர் மலையாளத்திலுள்ள திருவஞ்சைக் களத்திலிருந்து கொண்டு ராஜ்ய பரிபாலனம் பண்ணினவர். திவ்யப்பிரபந்தத்தில், 'பெருமாள் திருமொழி' என்ற பெயரிலுள்ள பாசுரங்களைச் செய்த குலசேகர ஆழ்வாரும், திருவனந்தபுரத்திலிருந்து ஆட்சி செய்தவர்தான். அப்போதும் தமிழ்தான் அங்கே இருந்திருக்கிறது. இதற்கெல்லாம் முந்தி, இரண்டாயிரம் வருஷத்துக்கு முந்தி ஈச்வரனே சங்கரராக அவதாரம் செய்த போது கேரளம் தமிழ் தேசமாகவேதான் இருந்திருக்கிறது. பாரத நாட்டிலேயே இந்தத் தமிழ் நாட்டுப்பகுதியில்தான் வேதம் ரொம்பவும் ஜீவனோடு இருந்தது என்பதால்தான் அவர் அங்கே அவதரித்தார் என்பதிலிருந்து, தமிழ் தேசத்துக்கு வேதத்தில் இருந்துள்ள விசேஷமான பற்றுதல் தெரிகிறது.

∴ ∴ ∴

யுத்தம் செய்வது, காவல் காப்பது முதலான தொழில் ஒருத்தனுக்கு ஏற்பட்டிருக்கிறது. இன்னொருவன் வியாபாரம் செய்கிறான், பசுவை ரக்ஷிக்கிறான். வேறொருவன் இந்த நாளில் தொழிலாளர்கள் என்று சொல்கிற labour force ஆக இருக்கிறான். பிராம்மணன், சமூகத்துக்காகச் செய்யவேண்டிய தொழில் என்ன?

இந்த லோக ரீதியில் மற்றவர்கள் தொழில் செய்கிறார்கள். ஆனால் நம்முடைய லோக வாழ்க்கையில் பரமாத்மாவின் அநுக்கிரஹம்தானே எல்லாவற்றுக்கும் முக்யமாக வேண்டியிருக்கிறது? அதை ஸகல ஜாதியாருக்கும் ஸம்பாதித்துக் கொடுப்பதற்கான காரியங்களே பிராம்மணனுக்கு ஏற்பட்டவை. பரமாத்மாவோடுகூட, முன்னமே சொன்னபடி, அவரது அதிகாரிகளைப்போல இருக்கிற தேவர்களை ஸகல ஜீவ ஜந்துக்களிடமும் பிரீதி உள்ளவர்களாகப் பண்ணவேண்டியதும் பிராம்மணனின் தொழிலைச் சேர்ந்தது. அவன் அத்யயனம் பண்ணும் மந்திரங்கள், அவன் புரிகிற கர்மாநுஷ்டானங்கள் எல்லாமே ஸகல ஜாதியாரின் க்ஷேமத்தை உத்தேசித்தவைதான். இந்த லோகத்தின் 'லெவலை' மீறிய சக்திகளோடு இவனுக்குக் காரியம் இருப்பதால், இவன் மற்றவர்களைவிட அதிக நியமங்கள், விரதங்களோடு இருந்து, மந்திரச் சக்தியை ஸம்பாதித்துக் கொள்ள

வேண்டியிருக்கிறது. மற்றவர்களுக்கு இவ்வளவு வேண்டாம். அவர்களுக்காகவும் சேர்த்து இவனுக்கு ஏற்பட்டிருக்கிறது என்று புரிந்து கொண்டால், இவனுக்கு மட்டும் 'ஸ்பெஷலாக' வைத்திருக்கிறது என்ற தப்பபிப்ராயம் உண்டாகாது.

ஃ ஃ ஃ

யார் எந்தத் தொழில் செய்தாலும் எல்லோருக்கும் சாப்பாடு, துணி, வீடு ஆகிய அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்து தர ராஜாங்கம் கடமைப்பட்டிருக்கிறது. இதற்குமேல் தேவைகளைப் பெருக்கிக்கொண்டு போனால்தான் போட்டி, பொறாமை எல்லாம் உண்டாகிறது. ஆனபடியால் எளிய வாழ்க்கை என்ற லட்சியமும், தொழில்களுக்குள் உயர்வு—தாழ்வு என்பது இல்லவே இல்லை என்ற எண்ணமும் வந்து விட்டால், வர்ண தர்மத்தைப் போல் உத்தமமான எந்த ஏற்பாடும் இல்லை என்று தெரியும். திருப்தியும், சௌஜன்யமும் சமூகத்தில் நிலவி, இது காரணமாக நம் நாகரிகம் மட்டும் மாளாமல், மகோன்னதமாக வளர்வதற்கு இந்த ஏற்பாடுதான் காரணம். நிறைந்த மனசோடு அவனவனும் தம் தொழிலை ஒரு குலதனம் என்கிற பெருமிதத்தோடு (Pride) ஒழுங்காகச் செய்த போது, அது ஆத்ம க்ஷேமத்தையும், லோக க்ஷேமத்தையும் உண்டாக்கிற்று.

ஃ ஃ ஃ

காருண்யம்—கருணை காட்டுவது—என்றால் இப்படிக் கருணை காட்டுகிறவர் ஒருபடி உயர நிற்கிற மாதிரியும், கருணைக்குப் பாத்திரமாகிறவர் ஒருபடி கீழே நிற்கிற மாதிரியும் தொக்கி நிற்கிறது. நாம் உசந்த ஸ்தானத்தில் இருக்கிறோம், நம் உதவியைப் பெறுகிறவர் நம்மைவிடத் தாழ்த்தியாக இருக்கிறார். நாம் 'கருணை' காட்டுகிறோம் என்று நினைக்கிறபோதே நாம் செய்கிற உபகாரம் அசுத்தமாகிவிடுகிறது. உபகாரம் செய்வதன் பயனாக நமக்கு எளிமை, அடக்கம் உண்டாக வேண்டும். மாறாக நாம் உபகாரம் பண்ணும்போது, போனால் போகிறது என்று யாருக்கோ கருணை காட்டுகிற மாதிரி நினைத்தோமானால், இது அஹங்காரத்துக்கு இடமாகி விடுகிறது. உபகாரத்தால் நம் ஆத்மாவை உயர்த்திக் கொள்வதற்கு நேர்மாறாக ஆத்ம ஹானியே உண்டாகிவிடும்.

ஃ ஃ ஃ

'எல்லா உயிர்களும் ஒன்றே; எல்லாவற்றிலும் ஈச்வரன் இருக்கிறான்' என்று ஒருத்தன் உணர்கிறபோதுதான் அவனுக்கு 'அருள்' உண்டாகிறது. இவன், தன் மநுஷ்யர்களுடன் சமமான நிலையில் இருந்து கொண்டு பிரியம் காட்டுவதைவிட இன்னும்

ஒருபடி கீழே இறங்கி, தன்னைக் குறைத்துக்கொண்டு, மற்றவனை ஈச்வரனாக நினைத்துத்தான் சேவை செய்கிறான். இப்படி இவன் தன்னைக் குறைத்துக் கொள்கிறபோதுதான் இவனுடைய அன்பு வெறும் பேச்சாக, எண்ணமாக மட்டுமில்லாமல் அதற்குக் காரிய ரூபத்திலேயே தெய்வீகமான சக்தி உண்டாகி, அது 'அருள்' ஆக ஆகிவிடுகிறது. கொஞ்சம்கூட மமதையே இல்லாமல் 'நாம் பெரியவர்; உபகாரம் பண்ணுகிறோம்" என்ற அகந்தையே இல்லாமல். இவன் ஸமஸ்த பிராணி களிடமும் ஈச்வர ஆராதனையாக அன்பைச் செலுத்துகிறபோது அதுவே இவனை ஸகல பிராணிகளுக்கும் மேலே உயர்த்தி விடு கிறது. இவனுடைய அன்பு வெறும் பேச்சாகவும் எண்ணமாக வும் மட்டுமில்லாமல், காரியத்திலேயே ஈஸ்வராநுக்ஹத்தை வரங்கித் தரக்கூடிய அருட்சக்தியைப் பெற்றுவிடுகிறது.

∴ ∴ ∴

'நம் கடன் பணிசெய்து கிடப்பதே' என்பதுதான் நம் வாழ்க்கையின் குறிக்கோளாக (motto) இருக்கவேண்டும்.

கடன் என்றால், 'கடனே என்று செய்தேன், கடனிழவே என்று செய்தேன்' என்றெல்லாம் சொல்கிறோமே அந்த மாதிரி வேண்டா வெறுப்பாகச் செய்வது என்று அர்த்தமில்லை. கடன் என்றால் கடமை (duty). அதை அன்போடு, ஆர்வத்தோடு, இருதயமாரச் செய்யவேண்டும்.

∴ ∴ ∴

ஒரு காக்கை இருக்கிறது. எங்கேயோ ஒரு பழத்தைச் சாப்பிட்டுவிட்டு நம் தோட்டத்திலே வந்து எச்சமிடுகிறது. அந்தப் பழத்தின் கொட்டை இங்கே நம் வீட்டுத் தோட்டத்தில் விழுந்து மரமாகிறது. அந்தக் காக்கை நமக்கு ஓர் உபகாரம் பண்ணிவிட்டது. நாய் காவல் காக்கிறது. குதிரையை வண்டி யில் கட்டிச் சவாரி பண்ணுகிறோம். கோமாதா நமக்குப் பௌதிகமாகவும், ஆத்மார்த்தமாகவும் பண்ணுகிற உபகாரமோ கொஞ்ச நஞ்சமில்லை. இப்படி எல்லாரிடமும் உபகாரம் பெற்று விட்டு, மநுஷ்ய ஜன்மா எடுத்துள்ள நாம், பிரதி உபகாரம் பண்ணாமல் இருந்தால் பாபம் அல்லவா? "நன்றி மறப்பது நன்றன்று". "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றெல்லாம் மகா பெரியவர் வள்ளுவர், இன்னும் மநு, வியாஸர் எல்லாரும் சொல்கிறார்களே! இதிலே மந்த்ரவத்தாகவும், கிராம ஜனங்களின் வழக்கத்தில்

வந்துள்ளதுமான அநேக சடங்குகளைப் பண்ணினாலே, அசேதனம் (inanimate) என்று நாம் நினைக்கிறவற்றின் அதிதேவதைகள் திருப்தி அடைந்து விடுகிறார்கள்.

⁂ ⁂ ⁂

தாவரங்களுக்கு ஜலம் கொட்ட வேண்டும். மிருகங்களிடம் அன்பு பாராட்ட வேண்டும். அவற்றுக்குக் கொடுமை செய்யவே கூடாது. 'வாயில்லா ஜீவன்' என்றே அவைகளை ரொம்பவும் பரிவோடு சொல்வது வழக்கம். முன்காலத்தில் ஊருக்குள் மட்டுமின்றி, வெளியிலே மாடுகள் மேய்ச்சலுக்குப் போகிற இடங்களில் கூட அவற்றுக்கெனவே குளம் வெட்டி வைப்பார்கள். ஒரு பசுவுக்குக் கழுத்திலே அரிக்கிறது. நம்மைப்போல அதற்குக் கையா இருக்கிறது, சொரிந்து கொள்ள? 'எனக்கு அரிக்கிறது' என்று சொல்ல அதற்கு வாய்கூட இல்லையே!' அதன் கஷ்டத்தை உணர்ந்து பசு சொரிந்து கொள்வதற்கென்றே அங்கங்கே கற்களை நாட்டி வைத்தார்கள். 'ஆதீண்டு குற்றி நிறுவுதல்' என்று இதை ஒரு பெரிய தர்மமாகவே நீதி நூல்களில் சொல்லியிருக்கிறது. கடைசியில் நம் மாதிரியான மநுஷ்யர்களிடத்தில் வந்தால், சிருஷ்டியில் பாக்கியுள்ள அத்தனை ஜீவ இனங்களுக்கும் எத்தனை கஷ்டம் இருக்குமோ, அத்தனையும் சேர்த்து வைத்து ஒவ்வொரு மநுஷ்யனுக்கும் இருக்கிறது. இது இவனுடைய அலாதி புத்தியினால் இவனே சம்பாதித்துக் கொண்ட சொத்து! இவனைப்போல் Problem (பிரச்னை) வேறு எதற்கும் இல்லை. இதிலே முக்கால் வாசி இவனே மனஸால் கற்பித்துக் கொண்டதுதான். இதைச் சரிப்படுத்துகிற மகாபெரிய பரோபகாரத்தைத்தான் மகான்கள் செய்கிறார்கள்.

⁂ ⁂ ⁂

'அனைத்து அறன்' அதாவது ஸர்வ தர்மமும் என்னவென்றால் அவரவரும் 'மனத்துக்கண் மாசிலன் ஆதல்'— அதாவது தங்கள் உயிரைத் தாங்களே துளி அழுக்கில்லாமல் நிர்மலமாகச் சுத்தம் செய்து கொள்வதுதான் என்கிறார் திருவள்ளுவர். கர்மாநுஷ்டானத்தால் அவரவரும் சித்த சுத்தி ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்கிற வைதிக சம்பிரதாயத்தைத்தான் இங்கே திருக்குறளும் சொல்கிறது. முதலில் இவன் தன்னைத்தானே சுத்தம் பண்ணிக் கொள்ளவேண்டும். இது இல்லாமல் பரோபகாரம், ஸோஷல் சர்வீஸ் என்று கிளம்பினால் அது வெற்றுக் காரியம்தான்.

⁂ ⁂ ⁂

தான் அடங்கி இருக்க வேண்டும். பக்தியோடு ஈச்வர சேவை என்று நினைத்துச் சமூகசேவை செய்யவேண்டும். அப்போதுதான் அது பலனளிக்கும். அந்தரங்க சுத்தமில்லாமல் செய்கிற காரியங்கள் வெறும் படாடோபமாகவும், 'ஷோ' வாகவுமே முடிந்துபோகும். இந்த படாடோபத்தால் 'சேவை' என்று செய்கிறவனுக்கு அகங்காரம் மேலும் ஜாஸ்தியாகத்தான் செய்யும். அகங்காரம் தொலைவதற்கு உதவவேண்டிய சேவையே அடக்கமும் பணிவும், பக்தியும், அன்பும் இல்லாமல் செய்தால் அகங்காரத்தை அதிகமாக்கிவிடும். குளிக்க வேண்டும் என்று போய்ச் சேற்றை வாரிப் பூசிக் கொண்டதாகிவிடும்.

ஃ ஃ ஃ

தனக்கென்று ஒன்றுமே வைத்துக் கொள்ளாமல் தானம் பண்ணவேண்டும். தன் பிராணனே போனாலும் சரி, இன்னொரு ஜீவனை நம் உயிரைக் கொடுத்தாவது காப்பாற்ற வேண்டும். ஒருத்தர் கஷ்டத்தில் இருக்கிறபோது அவர் என்ன ஜாதி, என்ன மதம், நல்லவரா—கெட்டவரா என்று இதையெல்லாம் ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்காமல், அவர்கள் யாராயிருந்தாலும், எப்படிப்பட்டவராயிருந்தாலும், நம்மாலான உபகாரத்தைப் பண்ணி அவர்களுடைய கஷ்டம் நிவிருத்தியாவதற்குச் ஸஹாயம் பண்ணவேண்டும். வித்யாசங்கள் பார்க்க வேண்டிய இடத்தில் பார்த்துத்தான் ஆகவேண்டும். சாஸ்திரப்படி லோக க்ஷேமத்துக்காக ஏற்பட்ட அதிகார பேதங்களைக் காப்பாற்றத்தான் வேண்டும். ஆனால் கஷ்டம், துக்கம் என்று வருகிறபோது வித்யாசமே பார்க்கக்கூடாது. குறிப்பாக அன்னதானத்தைப்பற்றிச் சொல்கிறபோது 'யார்க்கும் இடுமின்; அவர், இவர் என்னன்மின்' என்றே சொல்லி இருக்கிறது.

எல்லா தானங்களிலும் அன்னதானம் விசேஷம். பகவானும் கீதையில் ''எவன் தனக்காக மட்டும் ஆகாரம் தேடிச் சாப்பிட்டுக் கொள்கிறானோ, அவனுடைய பாபத்தையும் முழுக்க அவனேதான் அநுபவித்தாக வேண்டும்; வேறு யாரும் அதில் பங்கு எடுத்துக் கொள்ள மாட்டார்கள்'' என்கிறார்.

அன்னதானத்துக்கு என்ன விசேஷம் என்றால், இதிலேதான் ஒருத்தரைப் பூரணமாக திருப்திப்படுத்த முடியும். பணம், காசு, வஸ்திரம், நகை, பூமி, வீடு இந்த மாதிரியானவற்றை எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறவன், அதற்குமேல் தந்தாலும் 'வேண்டாம்' என்று சொல்ல மாட்டான். அன்னம்

போடுகிறபோதுதான் ஒருத்தன் என்னதான் முட்ட முட்டச் சாப்பிட்டாலும் ஓர் அளவுக்கு மேல் சாப்பிட முடியாது.

ஃ ஃ ஃ

மநுஷ்யர்களுக்குள் ஜாதி, யோக்யதை முதலானவைகளைப் பார்க்காமல் உபகாரம் பண்ண வேண்டும் என்பது மட்டுமில்லை, இம்மாதிரி மனித இனம் மட்டுமின்றி, சகல ஜீவராசிகளுக்கும் சிரமங்கள் தீர வேண்டும் என்று சொல்லித்தான் ரந்தி தேவனும் பஞ்சமனுக்குத் தீர்த்தத்தை வார்த்தான்.

ஃ ஃ ஃ

கார்த்திகைப் பண்டிகையன்று நிறைய அகல் ஏற்றி வைக்கிறோமல்லவா? இப்படி தீபத்தை ஏற்றும்போது, ஒரு சுலோகம் சொல்ல வேண்டும் என்று தர்ம சாஸ்திரத்தில் விதித்திருக்கிறது.

கீடா: பதங்கா: மசகாச்ச வ்ருக்ஷா:
ஜலே ஸ்தலே யே நிவ ஸந்தி ஜீவா:
த்ருஷ்ட்வா ப்ரதீபம் ந ச ஜன்ம பாஜா:
பவந்தி நித்யம் ச்வபசா ஹி விப்ரா: ॥

புழுக்களோ, பட்சிகளோ, அல்லது ஒரு கொசுவாகத்தான் இருக்கட்டும், அந்தக் கொசுவோ, நம் மாதிரி உயிரில்லை என்று நினைக்கப்படுகிற விருட்சமோ, இன்னும் பூமியிலும், ஜலத்திலும் எத்தனை தினுசான ஜீவராசிகள் இருக்கின்றனவோ அவற்றில் எதுவானாலும் அதுவோ, மநுஷ்யர்களுக்குள்ளேயே பேதம் இல்லாமல் பிராம்மணனோ, பஞ்சமனோ எவனானாலும் சரி, எதுவானாலும் சரி, இந்தத் தீபத்தைப் பார்த்துவிட்டால் அந்த ஜீவனுடைய சகல பாபங்களும் நிவிருத்தியாகி, இன்னொரு ஜன்மா எடுக்காமல் நித்தியானந்தத்தில் சேரட்டும் என்று இந்த சுலோகத்துக்கு அர்த்தம்.

ஃ ஃ ஃ

முன்பெல்லாம் சொக்கப்பானை என்று ஆலயத்திலிருந்து தீபத்தைக் கொண்டுவந்து பெரிசாக ஏற்றினார்களே, திருவண்ணாமலையில் இப்போதும் மலை உச்சியில் மகா பெரிய ஜோதியாகத் தீபம் ஏற்றுகிறார்களே, இதன் உள் அர்த்தம் என்ன? சின்ன அகலாக இருந்தால் அதன் ஜ்வாலை கொஞ்ச தூரம்தான் பரவும். சொக்கப்பானை என்றால் அதன் பிரகாசம் ரொம்ப

தூரத்துக்குத் தெரியும். அண்ணாமலை தீபம் மாதிரி மலையில் ஏற்றி வைத்து விட்டாலோ, அது எத்தனையோ ஊர்கள் தாண்டிக் கூடத் தெரியும். அந்தனை பெரிய எல்லைக்குள் இருக்கிற சகல ஜீவஜந்துக்களின் மீதும் இந்தப் பிரகாசம் பட்டு அவற்றின் பாபங்கள் போகவேண்டும் என்ற உத்தமமான சிந்தனையில்தான் சொக்கப்பானை, அண்ணாமலை தீபம் என்றெல்லாம் நம் பூர்விகர்கள் ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள்.

ஃ ஃ ஃ

நரகத்தில் இருப்பவர்களுக்குக்கூட நம் சாஸ்திரப்படி பரோபகாரம் நடக்கிறது.

திவஸமும், தர்ப்பணமும் செய்கிறபோது பூலோகத்திலோ, வேறு எங்கோ, எந்த ரூபத்திலோ பிறந்திருக்கிற நம் மூதாதைகளுக்கு அது க்ஷேமத்தைக் கொடுக்கிறது. இங்கே நாம் கொடுக்கிற எள், தண்ணீர், பிண்டம் முதலியவைகளைப் பிதிரு தேவதைகள், நம் மூதாதைகள் எந்த ரூபத்தில் எங்கே பிறந்திருந்தாலும் அதற்கேற்ற ஆகாரமாக மாற்றி அங்கே கிடைக்கச் செய்து விடுவார்கள்.

ஃ ஃ ஃ

செத்துப் போன உடனேயே எல்லோரும் மறுபடியும் இந்த பூலோகத்திலேயே பிறந்து விடுவதில்லை. நன்றாக வேலை செய்தால் இன்க்ரிமெண்ட் மட்டுமல்லாமல், போனஸும் தருகிறார்கள் அல்லவா? ரொம்ப நன்றாகச் செய்தாலோ பிரமோஷனே கொடுத்து மேலே தூக்கி விடுகிறார்கள். வேலையில் தப்பு பண்ணினால் இன்க்ரிமெண்ட்டை நிறுத்திவிடுகிறார்கள். பெனால்டி (அபராதம்)வேறு விதிக்கிறார்கள். ரொம்ப மோசமாகப் பண்ணினால் கீழ் பதவிக்கே தள்ளி விடுகிறார்கள். இதே போல், புண்ணியம் பண்ணினவர்களுக்கு இன்க்ரிமெண்ட் மாதிரி இந்த பூலோகத்திலே சௌக்கியமான இன்னொரு ஜன்மா கிடைப்பதற்கு முன்னாடி ஒரு போனஸ் கிடைக்கிறது. ஸ்வர்க்க வாஸம்தான் இந்த் போனஸ். ரொம்பப் புண்ணியம் பண்ணியிருந்தால் ஸ்வர்க்க லோகத்துக்கே நிரந்தரமான பிரமோஷன். இப்படியே பாபம் பண்ணினவர்கள் முதலில் பெனால்டியாக நரக லோகத்தில் வசிக்க வேண்டும். அப்புறம் இன்க்ரிமெண்ட் இல்லாத மாதிரி பூலோகத்தில் கஷ்டத்திலேயே பிறக்கவேண்டும். ரொம்பப் பாபம் பண்ணினால் கீழ்ப் பதவிக்கே போக வேண்டியது—நிரந்தரமான நரக வாஸம்.

'சிரத்தையோடு தானம் கொடுக்க வேண்டும். அசிரத்தையோடு கொடுக்கக்கூடாது' என்கிறது. ஸ்ரீயை (அதாவது செல்வத்தைக்) கொடுக்கும்போதே மனஸை ஸ்ரீயாக (லக்ஷ்மீகரமாக, மங்களமாக, சந்தோஷமாக) வைத்துக்கொண்டு கொடுக்க வேண்டும் என்கிறது. முகத்தைச் சுளிக்காமல் கொடுக்க வேண்டும். ஸ்ரீயின் (செல்வத்தின்) நிறைவுதான் 'ச்ரேயஸ்' என்பது. மனஸில் ஸ்ரீயுடன், மனமலர்ச்சியுடன் கொடுத்தால் இந்தத் தானத்தின் பலனாக 'ச்ரேயஸ்' கிடைக்கிறது. இன்னம் ஜாஸ்தி கொடுப்பதற்கு நம்மால் முடியவில்லையே என்று வெட்கத்தோடு கொடுக்க வேண்டும். 'ஹ்ரீ'யுடன் கொடு என்கிறது உபநிஷத். "ஹ்ரீ" என்றால் வெட்கம், லஜ்ஜை என்று அர்த்தம், வெட்கம் இரண்டு காரணத்துக்காக. ஒன்று, இன்னும் ஜாஸ்தி தர முடியவில்லையே என்று; இரண்டாவது, தானம் பண்ணுவது வெளியிலேயே தெரியக்கூடாது என்ற கௌரவமான கூச்சம். வெளியில் தெரிந்தால் மற்றவர்களும் 'தேஹி' என்று பிடுங்குவார்களோ என்பதால் அல்ல. இவன் தர்மிஷ்டன் என்று நாலு பேருக்குத் தெரிந்து நம்மை ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்தால், நமக்கு அகம்பாவம் வந்துவிடும். அது தானத்தின் பலனையெல்லாம் சாப்பிட்டுவிட்டுப் போய்விடும்.

ஃ ஃ ஃ

தானம் பண்ணிவிட்டு நாம் நம் பெயரைப் பேப்பரில் போட்டுக் கொள்ளாமல் இருக்கலாம். ஆனாலும், 'எப்படியாவது நாலுபேருக்கு நாம் தானம் பண்ணினதை நைஸாகத் தெரியப்படுத்த வேண்டும்' என்ற எண்ணம் உள்ளூற இருந்தால், அதுவும் தோஷம்தான். அந்த நாலுபேர், நாம் தானம் பண்ணினதற்காக ஒரு பங்கு கொண்டாடினால், அதோடு, 'பண்ணின தானத்தை வெளியிலேயே தெரிவிக்காமல் இருப்பது எத்தனை உத்தமான குணம்!' என்று பத்து பங்கு ஸ்தோத்திரம் பண்ணுவார்கள். மனஸுக்குள் நாம் இந்த ஸ்தோஸ்திரத்துக்கு ஆசைப்பட்டுவிட்டால் பேப்பரில் போட்டுக் கொள்வதைவிட இதுவே பெரிய தோஷமாகி விடும். 'தானம் வாங்குகிறவன் நமக்கு அந்நியன் இல்லை. நம்மவனேதான்' என்ற உணர்ச்சி இருந்தால் கொடுத்ததை வெளியில் சொல்லவே தோன்றாது. நம் குழந்தைக்கு அல்லது நெருங்கிய பந்துக்களுக்கு நாம் ஏதாவது செய்தால் அதை வெளியில் விளம்பரம் செய்து கொள்வோமா? அதே மாதிரிதான். எவரும் நமக்குப் பந்துதான். சகல ஜந்துக்களும் ஒரே பார்வதி - பரமேச்வரர்களின் குழந்தைகள்தான், அதனால் நாம் 'தானம் கொடுக்கிறோம்' என்ற வார்த்தையைச் சொல்வது கூடத் தப்புத்தான். 'பகவான் நம்மைக் கொடுக்கும்படி

வைத்தான், கொடுத்தோம்' என்று அடங்கி, பவ்யமாகக் கொடுக்க வேண்டும். எங்கே இதிலும் ஓர் அஹங்காரம் வந்து விடுமோ என்று பயந்து கொண்டு கொடுக்க வேண்டும்.

ஃ ஃ ஃ

சொத்து சுதந்திரங்களை நாமே வைத்துக்கொண்டு அநுபவிப்பதில் பெறுகிற சுகம், ரொம்பவும் தாற்காலிகமானது. இந்தத் தாற்காலிக சுகம் நித்ய சௌக்கியமான ஆத்மாபி விருத்திக்கே ஹானியாகவும் ஆகிறது. ஆனால் இதே உடைமைகளை நாம் வைத்துக்கொண்டு அனுபவிப்பதைவிட, **கொடுத்து அநுபவித்தால்** இதுவே பரம ஆனந்தத்தைத் தருகிறது. சாச்வத சௌக்கியத்துக்கும் வழிகோலுகிறது. இதனால்தான் உபநிஷத்துக்களில் முதலாவதான 'ஈசாவாஸ்யத்'தில் முதல் மந்திரத்திலேயே, 'தியாகம் பண்ணி அநுபவி' என்று சொல்லியிருக்கிறது. காந்திகூட இதில்தான் தம்முடைய ஃபிலாஸஃபி முழுக்க இருக்கிறது என்று சொல்லி, இந்த உபநிஷத்தைத் தலைக்குமேலே வைத்துக்கொண்டு சிலாகித்து வந்தார்.

ஃ ஃ ஃ

'என்பும் உரியர் பிறர்க்கு' என்று குறள் சொன்ன மாதிரி தங்களுடைய ஸர்வத்தையும், பரோபகாரமாகத் தியாகம் பண்ண வேண்டும். சிபியின் கதை எல்லோர்க்கும் தெரியும். ஒரு புறவுக்காகத் தன் சரீரத்தையே, பிராணனையே தியாகம் செய்ய முற்பட்ட மகாபுருஷன் அவன். நம் மதத்தில் ஜீவகாருண்யத்துக்குத் தந்திருக்கிற முக்கியமான ஸ்தானத்துக்கு சிபி கதை ஒன்றே போதும். வேத பூமியான இந்தப் பாரத பூமியின் விசேஷம் மனிதனுக்காக மட்டுமில்லாமல் மற்ற ஜீவராசிகளுக்கும், பூச்சி பொட்டுகளுக்கும் கூட க்ஷேமத்தைக் கோரித் தியாகம் பண்ணச் சொல்வது; இதில் இன்னொரு பக்கம். இந்த மண்ணின் விசேஷத்தால் மற்ற ஜீவராசிகளுக்கும் கூட இப்படிப்பட்ட பரோபகார சிந்தனையும், தியாக புத்தியும் இருப்பதாகச் சொல்கிறது புராண விருத்தாந்தங்கள்.

ஃ ஃ ஃ

அதிதியைத் தெய்வமாக நினைப்பது, அவனைக் கவனிக்காவிட்டால் தெய்வக் குற்றம் செய்வது மாதிரி பயப்படுவது— இதெல்லாம் நம் மதத்தின் முக்கியமான அம்சங்களாகும்.

யமன் என்றால் நாம் எல்லோரும் கதி கலங்குகிறோம். அப்படிப்பட்ட யமனே கதி கலங்கி விட்டதாகக் கடோப நிஷத்தில் ஒரு கதையில் வருகிறது. அவன் யாரிடம் பயப் பட்டான்? ஒரு சின்னப் பிராம்மணப் பிள்ளையிடம்தான் பயப் பட்டான்! ஏன் பயப்பட்டான்? இந்தப் பையன் யமனுடைய் கிரஹத்துக்கு வந்து மூன்று நாட்கள் யாரும் கவனிக்காமல் பட்டினி கிடந்துவிட்டான். அதிதி ஒருத்தன் அலட்சியப்படுத்தப் பட்டால் அது மகா அபசாரமாகுமே என்றுதான்சாட்சாத் யமனே பயந்துவிட்டான். சர்வ லோகத்தையும் நடுங்கச் செய்கிறவன் இந்த வாண்டுப் பயலிடம் நடுங்கிக் கொண்டுவந்து, 'என் கிரு ஹத்தில் நீ மூன்று ராத்திரி சாப்பிடாமல் இருந்து விட்டாய். இதனால் எனக்குத் தோஷம் உண்டாகாமல் இருக்க உனக்கு நமஸ் காரம் பண்ணுகிறேன் அப்பா. ஒவ்வொரு நாள் பட்டினி இருந்த தற்கும் ஈடாக ஒவ்வொரு வரம் வீதம் என்னிடம் நீ மூன்று ரெம் வாங்கிக்கொள்' என்று பிரார்த்தித்ததாக உபநிஷத்து வசால்கிறது.

ஃ ஃ ஃ

காரி, பாரி, ஓரி என்றெல்லாம் ஏழு பேரைக் கடை எழு வள்ளல் என்பார்கள். பாரி வள்ளல் முல்லைக்கொடி படருவதற் காகத் தன் தேரையே கொடுத்த கதை எல்லோருக்கும் தெரியும். இன்னொருத்தன் (பேகன்) மயில் குளிரில் நடுங்குகிறதே என்று தன் உத்தரீயத்தையே எடுத்து அதற்குப் போர்த்தினான். அதிகமானுக்கு சிரஞ்சீவித்வத்தைத் தரக்கூடிய நெல்லிக்கனி கிடைத்தது. சிரஞ்சீவியாக இருந்து என்ன ஸாதிக்கப்போகிறோம்? அவ்வைப்பாட்டி இருக்கிறாளே, ஸதாவும் லோக க்ஷேமத்தைப் பண்ணிக்கொண்டு ஊர் ஊராக ஓடிக் குழந்தைகளுக்கு உபதேசம் செய்து வருகிறாளே, அவள் திடகாத்திரத்தோடு எத்தனை ஆயுசு இருந்தாலும், அதுதான் லோகத்துக்கு நல்லது என்று அவன் நினைத்து, அவளுக்கே அந்த நெல்லிக்கனியைத் தானம் பண்ணிவிட்டான்.

'இது புத்திசாலித்தனமாக இருக்கிறது. ஆனால், முல்லைக்குத் தேரைத் தரவாவது? மயிலுக்கு எங்கேயாவது குளிருமா? அதற்குப் பட்டுப் பீதாம்பரத்தைப் போர்த்துவதாவது? இதெல் லாம் புத்தியில்லாத காரியமாக அல்லவா இருக்கிறது?' என்று கேட்கலாம். என்னைக் கேட்டால் இப்படிப் புத்திக்கு வேலையே இல்லாமல் முட்டாள்தனம் மாதிரிக்கூடத் தோன்றுகிற காரியங் கள் தான் நிஜமான அன்பை, நிஜமான தியாகத்தைக் காட்டு கின்றன. அன்பு பீறிக் கொண்டு வருகிறபோது மூளையினால்

அதற்கு நியாயா நியாயங்கள் பார்க்க முடியாது. இப்படித்தான் நாயன்மார்களைப் பார்த்தால், பெண்டாட்டியையே ஒருத்தர் தானம் பண்ணினார். இன்னொருத்தர் பிள்ளையையே கறி பண்ணிப் போட்டார் என்கிறபோது இதெல்லாம் மூடத் தனம், உணர்ச்சிக் கட்டுப்பாடு இல்லாத காரியம் என்று சொல்லக்கூடாது. அவர்களுக்கு எப்படிப்பட்ட தியாக சிந்தனை இருந்தது என்பதுதான் முக்கியம். மூளையால் சமாதானம் சொல்லவேண்டும் என்ற எண்ணமே இல்லாமல், உருட்டிப் புரட்டிக்கொண்டு வந்துவிட்ட தியாகம் தான் நிஜமான தியாகம் என்பது என் அபிப்பிராயம்.

ஃ ஃ ஃ

'பூர்த்தம்' என்ற பெயரில் சோஷல் சர்வீஸைப் பற்றி தர்ம சாஸ்திரங்களில் நிறையச் சொல்லியிருக்கிறது.

**'பூர்த்தம் காதாதிகர்மயத்'** என்று ஸம்ஸ்கிருத டிக்ஷனரியான அமரத்தில் சொல்லியிருக்கிறது. 'கர்தம்' முதலான கர்மாக்கள் பூர்த்தம் ஆகும் என்று அர்த்தம்.

கர்தம் என்றால் வெட்டுவது. அதாவது குளமோ, கிணறோ, வாய்க்காலோ வெட்டி உபகாரம் பண்ணுவது. சாஸ்திரங்களில் விசேஷித்துச் சொல்லியிருக்கும் இந்த பூர்த்த தர்மத்தை மறந்ததால்தான் ஜலக் கஷ்டம் (water scarcity) என்று ஓயாமல் அவஸ்தைப்படுகிறோம். அந்தக் காலத்தில் இந்தக் காரியம் ரொம்ப முக்கியமாக இருந்ததால்தான் நாம் கூப்பிட்டு ஒருத்தன் வரவில்லை என்றால், 'அங்கே என்ன வெட்டிக் கொண்டிருக்கிறானோ?' என்று கேட்கிற வழக்கம் வந்திருக்கிறது. அதாவது அவன் வெட்டிக் கொண்டிருந்தால் மட்டும் நாம் எத்தனை அவசரத்தில் கூப்பிட்டாலும் வராமலிருக்கலாம் என்று அர்த்தமாகிறது.

ஃ ஃ ஃ

பாதை போடுவது ஒரு தர்மம். விருக்ஷம் வைப்பது இன்னொரு தர்மம். புதிதாக வைப்பதோடு இருக்கும் விருக்ஷங்களை வெட்டாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். புதிதாக வைக்கிற செடிக்குத் தினம் ஜலம்விட்டு, அது விருக்ஷமாக வளரப் பண்ணவேண்டும். 'வன மகோத்சவம்' என்று இன்றைக்குப் பெரிய மநுஷ்யர்கள் வந்து செடி நட்டுவிட்டு நாளைக்கே அதற்கு ஜலம்விட ஆள் இல்லாமல் அது பட்டுப் போனால் என்ன பிரயோஜனம்? இதுமாதிரி டெமான்ஸ்ட்

ரேஷன், வெளிவேஷம் நமக்கும் உதவாது. லோகத்துக்கும் உதவாது. இதற்குப் பதில் யாருக்கும் தெரியாமல் ஒருத்தன் ஏதோ ஒரு ஒற்றையடிப்பாதையில் உள்ள முள்ளை, கண்ணுடியை அப்புறப்படுத்தி வந்தால் அதுவே மற்றவர்களுக்கு வழியைச் சுத்தி பண்ணுவதோடு இவனுக்கும் சித்த சுத்தியைக் கொடுத்து விடும்.

ஃ ஃ ஃ

இப்போதெல்லாம் தெய்வ காரியத்தை விட்டு விட்டுச் சமூக சேவை செய்ய வேண்டும் என்பவர்கள் திருமூலர் திருமந்திரத்தை மேற்கோள் காட்டுகிறார்கள்.

நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றியில்
படமாடக் கோயில் பகவர்க்கதாமே

'மக்களுக்குச் செய்கிற தானதர்மங்கள் பகவானுக்குப் பண்ணுகிற பூஜையாகும்' என்று இதற்கு அர்த்த மாகும். ஸ்ரீமத் பாகவத்திலும் பகவான் லோகத்தை யெல்லாம் பகவத் ஸ்வரூபமாகப் பார்த்து சேவை செய்வதும் பூஜைதான் என்கிறார்.

ஃ ஃ ஃ

ஆத்மார்த்தமாகவே பல சமூக சேவைகள் உண்டு. உதாரணமாக, மகான்களுடைய நூல்கள், மகான்களைப்பற்றிய நூல்கள், ஸ்தோத்திரக் கிரந்தங்கள் முதலியவற்றை அச்சிட்டு ஜெயிலில் இருக்கிறவர்களுக்கும், ஆஸ்பத்திரியில் இருக்கிறவர் களும் இலவசமாகக் கொடுப்பது ஒரு பெரிய பரோபகாரம். அந்தந்த அதாரிடி (நிர்வாகிகள்) அநுமதித்தால் இந்த இடங்களில் மத சம்பந்தமான பேச்சு, பஜனை, காலக்ஷேபம் இதெல்லாமும் நடத்தலாம்.

ஃ ஃ ஃ

ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவனும் ஒவ்வொரு நாளும் ஒரு பசுவுக்காவது ஒருபிடியாவது புல் கொடுக்க வேண்டும். தோட்டம் உள்ள எல்லோரும் அதில் கொஞ்சமாவது மாட்டுக் கேற்ற அகத்திக் கீரை போடவேண்டும் என்றெல்லாம் ஏற்பாடு செய்து அதன்படியே ரொம்பப் பேர் நடத்திவந்தார்கள். இதற் கெல்லாமாவது கொஞ்சம் செலவு, தியாகம் பண்ண வேண்டி யிருக்கிறது. இது கூட இல்லாமல், நம் அகத்தில் கறி, காய் முதலியவற்றை நறுக்கும் போது தோலை வீணாகத்தானே போடு

கிறோம்? அப்படிப் போடாமல், சிலர் வீடு வீடாகப் போய் இந்தத் தோலையெல்லாம் 'கலெக்ட்' பண்ணி மாடுகளுக்குப் போட ஏற்பாடு பண்ணினோம். நான் திரும்பத் திரும்பச் சொல்லிச் சொல்லி அநேக இடங்களில் இந்தக் காரியம் நடந்தது. இப்போதுங்கூடப் பல இடங்களில் தொடர்ந்து நடக்கிறது.

ஃ ஃ ஃ

கோனேரிராஜபுரத்தில் ஒரு பிராம்மணக் குடும்பம். அவர்கள் எங்கே குளம் வெட்டினாலும் அதற்குப் பாதிப் பணம் கொடுப் பார்கள். ஆனால் ஒரு கன்டிஷன் சொல்லுவார்கள். அதாவது குளத்துக்கு ஒரு பக்கம் படித்துறை கட்டாமல், நிலத்தையே ஜல மட்டம்வரை சரித்துவிட வேண்டும் என்பார்கள். ஏனென்றால், ஆடு மாடுகளுக்குப் படியில் சௌகரியமாக இறங்கி வந்து நின்று ஜலம் குடிக்கத் தெரியாது.

ஃ ஃ ஃ

''வாரத்தில் ஒருநாள் கூட்டு வழிபாடு, வாரத்தில் ஒரு நாள் பொதுப்பணி என்றால் எப்படி முடியும்? ஒருநாள்தானே 'லீவ்' இருக்கிறது?'' என்று கேட்பீர்கள். அந்த ஒரு நாளிலேயே தான் இரண்டையும் சேர்த்துச் செய்யச் சொல்கிறேன். தெய்வப்பணி, சமூகப்பணி இரண்டையும் ஞாயிற்றுக்கிழமை தோறும் செய்யவேண்டும்.

ஃ ஃ ஃ

கோவில் வாசலில் எல்லா ஜனங்களும் சேர்ந்து வழிபட்டு அத்தனைபேரும் அந்த ஒரே பராசக்தியின் குழந்தைகளாகச் சேர்ந்து பகவான் நாமத்துடனேயே கோவிலை பிரதக்ஷணம் பண்ணிக் கொண்டு போய்க் குளம் வெட்டுவதையோ, ரோடு போடுவதையோ, நந்தவனம் வளர்ப்பதையோ செய்ய வேண்டும். வேலையெல்லாம் முடிந்தபின்னும் கோவிலுக்கே திரும்பி வந்து, உன் கிருபையால் இன்றைக்குக் கொஞ்சம் பாபத்தைக் கழுவிக் கொள்ள முடிந்தது; சரீரம் எடுத்தற்குப் பயனாக ஓர் உபகாரம் பண்ண முடிந்தது; என்று நமஸ்காரம் செய்ய வேண்டும். கொஞ்சம் பஜனை—ஒரு பத்து நிமிடம் இருந்தால் கூடப் போதும், கொஞ்சம் உபந்நியாசம் எல்லாம் நடத்தி எல்லாரும் கலைய வேண்டும். அறுபத்து மூவர் அல்லது ஆழ்வாராதிகள் அல்லது பக்த விஜயத்தில் வரும் மகான்கள்

இவர்களைப் பற்றிய உபந்நியாசமாக இருந்தால் நம்மாதிரி மனிதர்களாக இருந்தவர்களே எப்படியெல்லாம் தியாகத்திலும், பிரேமையிலும் தெய்வமாக உயர்ந்திருக்கிறார்கள் என்று மனசில் ஆழப் பதியும்.

ஃ ஃ ஃ

பெண்களும் பகலில் ஒழிவு இருக்கிறபோது சேர்ந்து நல்ல மத நூல்களைப் படித்தும் பிறருக்குச் சொல்லிக் கொடுக்கலாம். மடம், கோயில் மாதிரியானவற்றுக்குச் சுத்தமான மஞ்சள், குங்குமம் பண்ணிக் கொடுக்கலாம். ஸ்வாமி தீபத்துக்கு அகத்திலேயோ சுத்தமாக வெண்ணெய் காய்ச்சி, பசும்நெய் எடுத்துத் தரலாம், முனை முறியாத அக்ஷதைகள் பொறுக்கி அனுப்பி வைக்கலாம். 'அக்ஷதை' என்றாலே 'முறியாதது' என்று அர்த்தம். ஆனால் இப்போது மந்திராக்ஷதை என்று போடுவதில் பாதி நொய் மாதிரி தூளாகத் தானே இருக்கிறது? மந்திராக்ஷதை முழுசாக இருந்தால் தான் அதனால் மங்களம் கிடைக்கும் எங்கிருந்தோ 'டின்'னில் அடைத்து வரும் நெய்யில் ஏதாவது கொழுப்புக் கலந்திருந்தால் அதை ஸ்வாமி தீபத்துக்கு போடும்போது உத்தேசித்த க்ஷேமம் உண்டாகாமலே போய்விடும். நான் கேள்விப்பட்டிருக்கிறேன், முன்பெல்லாம் யாராவது ஒரு ஹோமம், யக்ஞம் என்று செய்தால் விரோதிகள் அதை நிஷ்பலனாக்குவதற்கு 'ஹோமத்துக்கு நாங்கள் நெய் கைங்கரியம் செய்கிறோம்' என்று சொல்லிக் கொண்டு, நெய்யில் கொஞ்சம் பன்றிக் கொழுப்பைக் கலந்து கொடுத்துவிடுவார்களாம், அவ்வளவுதான். இந்த மாதிரி அசுத்த நெய்யினால் ஹோமம் பண்ணினால் பண்ணுகிறவர்களுக்கு நல்ல பலன் கிடைக்காமல் போய்விடும் என்பதோடு, விபரீத பலன்கள் உண்டாகும். பிற்பாடு அந்த விரோதிகளைப் பகவான் தண்டிப்பான் என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். இதை எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் ஹோமம் அல்லது ஸ்வாமி தீபத்துக்கான நெய், மந்திராக்ஷதை, குங்குமம் முதலியன சுத்தமாக இருக்க வேண்டும். இவற்றில் கடைச் சரக்குகளை நம்புவதை விடப் பெண்கள் சேர்ந்து கைங்கரியமாகச் செய்தால் சிலாக்கியமாக இருக்கும்.

ஃ ஃ ஃ

பட்டுப்புடவை, வைரம் இன்னும் வேறு 'தாம்தூம்' செலவுகள் இல்லாமலிருப்பதற்கு ஸ்திரீகள் ஒரு பிரதிக்ஞை பண்ணிக் கொண்டால் அதுவே பெரிய உபகாரம் ஆகும். பட்டுத் துணி வேண்டாமென்று வைப்பதால் லக்ஷக்கணக்கான பட்டுப் பூச்சிகளைச் சாகாமல் காப்பாற்றிய புண்ணியம் கிடைக்கும்.

அதோடு 'இருக்கிறவர்'கள் இப்படிச் செலவு செய்வதைப் பார்த்து 'இல்லாதவர்'களுக்கும் ஆசை உண்டாகிறது. கடன், கஸ்தி வாங்கியாவது ஆசையைப் பூர்த்தி செய்துகொள்கிறார்கள். இந்த ஆடம்பரங்கள் போய், காப்பிக்குப் பதில் மோர்க்கஞ்சி சாப்பிடுவது என்றாகிவிட்டால் எல்லாக் குடும்பத்திலும் பாதிச் செலவு மிஞ்சும். கடன் வாங்கிக் குடித்தனம் செய்பவர்கள் கடன் வாங்காமல் காலம் தள்ளலாம். 'இருக்கிறவர்'களும் இதற்கெல்லாம் ஆகிற செலவைப் பரோபகாரத்துக்குப் பயனாக்கலாம்.

ஃ ஃ ஃ

மநுஷ்யனின் ஆத்மாவிருத்திக்கு பரதிகூலமாக வெறும் லௌகிக ரீதியில் எந்த உபகாரமும் உபகாரமே இல்லை; அபகாரம்தான். எத்தனைக்கெத்தனை எளிமையாக வாழ்கிறோமோ அத்தனைக்கு அத்தனை ஆத்ம க்ஷேமம். ஆனதால் மற்றவர்கள் எளிய வாழ்க்கையில் இருக்கும்படியாகப் பண்ணுவதுதான் நிஜமான உபகாரம். இதை எப்படிப் பண்ணுவது? நாம் டாம்பீகமாக வாழ்ந்து கொண்டு அவர்களுக்கு உபதேசம் செய்தால் நடக்குமா? ஆகையால் நாமே அப்படி எளிமையாக வாழ்ந்து காட்ட வேண்டும். ஆகையால் 'நாம் எப்படி வாழ்கிறோமோ, அப்படியே மற்றவர்களும் வாழவேண்டும்' என்று நினைப்பதற்கு முந்தி, நாம் 'எப்படி வாழ வேண்டும் என்பதையும் தீர்மானம் பண்ணிக்கொள்ள வேண்டும். "மற்றவர்கள் எல்லோரும். எப்படி வாழ முடியுமோ, எப்படி வாழ்ந்தால்தான் ஆத்மா விருத்திக்கு நல்லதோ, அப்படித் தான் நாமும் வாழவேண்டும்; அதாவது ரொம்ப சிம்பிளாக வாழ வேண்டும்" என்று முதலில் தீர்மானம் பண்ணிக்கொள்ள வேண்டும்.

ஃ ஃ ஃ

ஒருத்தர் செத்துப்போன உடனே பித்ரு லோகம் போய் விடுவதில்லை; இன்னொரு ஜென்மா எடுத்து விடுவதில்லை. இறந்து போனவனின் ஜீவன் ஒரு வருஷம் பிரயாணம் பண்ணித்தான் பித்ரு ஸ்தானத்தை அடைகிறது. இதை நாம் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற மாதிரியே கிரீக் மைதாலஜி முதலான மதக்ந்தரங்களிலும் சொல்லியிருக்கிறது. ஜீவன் வைதரணி நதியைக் கடந்து எம பட்டணம் போகவேண்டும் என்று நாம் சொல்கிற மாதிரியே அவர்களும் ஒரு நதியைச் (Styx) சொல்லி அதைத் தாண்டி மறுலோகத்துக்குப் (Hades) போக வேண்டும் என்கிறார்கள். நாம் சொல்கிற மாதிரியே எம பட்டணத்தில் இருக்கிற

காவல் நாய் போல அவர்களும் ஒன்றைச் (Cerberus) சொல்கிறார்கள். ஒரு ஜீவன் பரலோகம் செல்வதற்குப் பிடிக்கிற இந்த ஒரு வருஷத்தில்தான் அதன் திருப்திக்காக மாதாமாதம் சில சடங்குகளைச் செய்வது, இம்மாதிரி பரலோக யாத்திரையில் வழிக்கு உணவு தருவதைக்கூட இதர மதங்களில் சொல்லி இருப்பதாகக் கேட்டிருக்கிறேன். பிள்ளை குட்டி இல்லாதவர்களுக்கும் நாம் கயை, பதரி போன்ற இடங்களில் பிண்டம் போடுவது போலவே, கிறிஸ்தவர்களும் (All Souls Day) என்று ஒரு நாளில் எல்லா ஆத்மாக்களின் திருப்திக்காகவும் வழிபாடு நடத்துகிறார்கள். லோகம் பூராவும் இப்படி ஒரு நம்பிக்கை, அபிப்பிராயம் இருக்கிறது என்றால் அது சத்தியமாகத்தான் இருக்க வேண்டும்.

ஃ ஃ ஃ

தேகம் ரொம்ப இழிவானது. அதிலிருந்து கிளம்ப வேண்டும் என்று பெரியவர்கள் பாடி வைத்திருப்பதெல்லாம் உண்மைதான். ஆனால் இன்னொரு நிலையில் பார்த்தால் இந்த தேகம் என்பது ஒரு மகா அற்புதமான மெஷினாக இருக்கிறது. ஒரே மிஷினில் ஒவ்வொரு பாகம் ஒவ்வொரு தினுசாக காரியத்தைச் செய்கிறது. கண் என்று ஒன்று வெளிச்சத்தையும், வர்ணங்களையும் பார்க்கிறது. காது என்று ஒன்று சப்தங்களைக் கேட்கிறது. இருக்கிறதெல்லாம் ஒரே ஆத்மா. இத்தனை அவயவங்களுக்குள்ளேயும் ஒரே ஜீவன்தான் இருக்கிறது. என்றாலும் கண்ணும், காதும் கிட்டக் கிட்ட இருந்தும்கூடக் கண்ணால் கேட்க முடிவதில்லை, காதால் பார்க்க முடிவதில்லை. பக்கத்திலேயே வாய் என்ற ஒன்று. அதற்குத்தான் ருசி தெரிகிறது. பேசுகிற சக்தியும் அதற்கே இருக்கிறது. தொண்டையில் பல தினுசாகக் காற்றைப் புரட்டி அழகாகக் கானம் செய்ய முடிகிறது. பல வஸ்துக்களைப் பிடிப்பதற்கு ஏற்ற மாதிரி கையும் விரல்களும் அமைந்திருக்கின்றன இந்த அமைப்பு கொஞ்சம் வேறு விதமாக இருந்தாலும், இப்பொழுது நாம் பண்ணுகிற காரியங்களைப் பண்ண முடியாது. அடி எடுத்து வைத்து மேலே மேலே போவதற்கு வசதியாக காலின் அமைப்பும் இருக்கிறது. நடக்கிறபோது கூடிய மட்டும் ஜீவராசிகள் நசுங்காதபடி, பூரான் மாதிரியானவற்றின் மேலேயே நாம் பாதத்தை வைத்தால்கூட அவை நெளித்துக் கொண்டு ஓட உள்ளங்காலில் குழி வைத்தாற் போன்ற ஏற்பாடு. சப்பணம் கட்டி உட்கார வசதியாக முழங்காலில் நரம்புகளின் அமைப்பு என்று இப்படி ஒவ்வொன்றைப் பார்த்தாலும் பராசக்தி எத்தனை சூட்சுமமான கற்பனையோடு ஒரு சரீரத்தைப் பண்ணி

இருக்கிறுள் என்று ஆச்சரியமாக இருக்கிறது. ஆகாரத்தை ஜரிக்க ஓர் அங்கம். ஜரித்ததை ரத்தமாக்க ஓர் அங்கம், மூச்சுவிட ஒன்று, ரத்தத்தை 'பம்ப்'பண்ண ஒன்று—எல்லாவற்றுக்கும் மேலே சகல காரியங்களேயும் டைரக்ட் பண்ணி, கண்ட்ரோல் பண்ணும்-மூளே என்றெல்லாம் விசித்திர விசித்திரமாகப் பகவான் சரீரத்தைக் கல்பித்திருக்கிறுர். சதை, ரத்தம், மஸில்ஸ், நரம்பு, எலும்பு என்ற ஒவ்வொன்றுக்கும் ஒரு 'பர்பஸ்' இருக்கிறது. எலும்புக்குள்ளேகூட 'மஜ்ஜை' என்ற ஜீவசத்து ஓடுவது ஓர் அதிசயம். மனித சரீரத்தில் இருக்கும் கோடிக் கணக்கான ஸெல்களில் ஒவ்வொன்றும் ஓர் அற்புத லோகம். இப்படித் தனித்தனியாக ஒவ்வொரு பாகமும் ஓர் அற்புதமான மெஷிஞக இருப்பதோடு மட்டுமல்லாமல், எல்லாமாக ஒன்றுக்கொன்று இசைவாக சகாயம் செய்து போஷித்துக் கொள்வதும் மகா அதிசயமாக இருக்கிறது. ஆனபடியால் எவனே லட்சத்தில் ஒருவன் தேகம் பொய், மனஸ் பொய் என்று ஞானியாக ஆகிறவன் ஆஞலும், பாக்கி எல்லாரும் பகவான் தந்திருக்கிற இந்த அற்புதமான மெஷினே வைத்துக்கொண்டு தர்மமாக வாழத்தான் முயற்சி பண்ண வேண்டியவர்களாக இருக்கிறேம்.

ஃ ஃ ஃ

குழந்தைகளேத் தங்களோடு வைத்துக்கொண்டு பாடம் சொல்லிக் கொடுக்கப் பிரியப்படுகிற குருமார்களேயும், அவர்களிடம் குழந்தைகளே அனுப்பி வைக்கக் கூடிய பெற்றேர்களேயும் சமூக உணர்ச்சியின் மூலம்தான் உண்டாக்கவேண்டும். இந்த சஹாயத்தைச் செய்யும்படியாக உங்களேக் கேட்டுக்கொள்கிறேன். படிப்பு முடிந்தபின் தக்ஷிணே தர முடியாத ஏழைக் குடும்பத்தினருக்காகவும் மற்றவர்கள் தரவேண்டும் அநேகமாக இப்படிப்பட்ட வசதி இல்லாதவர்கள்தான் குழந்தைகளேக் குருகுல வாஸத்திற்கு அனுப்பக் கூடியவர்கள். அவர்களுக்கான ஸஹாயத்தை அங்கங்கே பத்துப்பேர் சேர்ந்து பண்ணிஞலும் போதும். தனியாகப் பெரிய ஸ்தாபனம் என்று ஏற்படுத்தக் கூட வேண்டாம். ஸ்தாபனம் கூடவே கூடாது என்று சொல்வதாக அர்த்தமில்லே. ஆஞல் அப்படி பெரிய ஸ்கேலில் நடப்பதற்காக நாம் காத்துக் கொண்டிருக்க வேண்டாம் என்கிறேன். இப்போது நம்மளவில் சாத்யமான அளவுக்கு ஆரம்பித்துவிட வேண்டும் என்கிறேன். நாம் ஒவ்வொருவரும் சொந்த அக்கறை (Personal interest) காட்டி, தன்ஞலானதைச் செய்யவேண்டும் என்பதே முக்கியம். இந்த மனேபாவம் வருவதுதான் அவசியம்.

ஃ ஃ ஃ

நாம் பக்தி செய்வதால் ஈசுவரனுக்கோ குருவுக்கோ ஒரு லாபமும் இல்லை. நமக்கேதான் பெரிய லாபம். என்ன லாபம் என்றால்:

நாம் அழுக்கு உடையவர்களாக இருக்கிறோம்; சஞ்சலம் உடையவர்களாக இருக்கிறோம். மனஸை ஒரு நிமிஷங்கூட ஓர் இடத்தில் நிறுத்த முடியாதவர்களாக இருக்கிறோம். எப்போதும் சுத்தமாக, நிரம்பிய ஞானம் உடையவனாக, அசங்காமல், ஆடாமல், பட்ட கட்டை மாதிரியாக இருக்கிறவனை நாம் நினைத்தால்தான் நாம் நினைக்கிற அவனது நிச்சலனமான நிலை நமக்கும் வரும். நாமே அவனாக ஆகிவிடுவோம் ஈசுவரனைத் தான் அப்படி நினைக்க வேண்டும் என்பது இல்லை. இப்படிப் பட்ட குணங்கள் உடையதாக எதை நினைத்துக்கொண்டாலும், நம்மைப்போன்ற ஒரு மனிதரையே இவ்வளவு குணங்கள் உடையவராகக் கருதி அவரையே குருவாக நினைத்துப் பக்தி செய்தாலும் நாம் அப்படியே ஆகிவிடுவோம். மனஸ் நின்றால் ஆத்மா பிரகாசிக்கும்; அதாவது நமது நிஜமான ஆனந்த நிலை தெரியும். மனஸை நிறுத்துவதற்காகத்தான் குரு பக்தி வேண்டும், ஈசுவர பக்தி வேண்டும் என்று நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன.

ஃ ஃ ஃ

தற்போது பள்ளிக்கூடங்களிலும், காலேஜ்களிலும் ஒருத்தனின் ஜீவனோபாயத்துக்காக உதவுகிற படிப்பைச் சொல்லிக் கொடுப்பது போல, ஆதி காலத்திலும் இவனுக்குத் தொழிலைச் சொல்லிக்கொடுத்தார்கள். ஆனாலும் தொழிலைச் சொல்லிக்கொடுக்கிறபோதே இதோடு நிறுத்திக்கொள்ளாமல், அத்யாத்ம சாஸ்திரங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். இதனால் இப்போது நடக்கிற மாதிரி வயிற்றுப்பாட்டுக்கு மட்டும் வழி செய்துவிட்டு, ஜனங்களின் நன்னடத்தை (மொராலிடி), ஆத்மாபிவிருத்தி இவற்றுக்கு ஒன்றுமே செய்யாத மாதிரி அப்போது இல்லை. பரலோக லக்ஷ்யம், தர்மம்—மொராலிடி இவற்றைக் கெட்டியான அஸ்திவாரமாக வைத்துக்கொண்டே ஜீவன விருத்தி நடக்க வழி செய்தார்கள்.

ஒரேயடியாக மநுஷ்ய ஸ்வபாவத்தைக் கவனிக்காமல் இவனை அத்யாத்ம மார்க்கம், வைராக்யம் என்று சின்ன வயசிலேயே கட்டுப்படுத்தவுமில்லை. ஒரேயடியாக இவனைத் தறுதலையாக அறுத்துவிட்டிருக்கவும் இல்லை.

ரொம்பவும் sympathy, understanding என்று சொல்கிறார்களே அப்படி மநுஷ்ய இயல்பை அநுதாபத்தோடு புரிந்துகொண்டு,

ஆனாலும் ஆத்மா வீணாகப் போகாதபடி, அதை ஹிதமாகப் பக்குவம் பண்ணுகிற தினுசில், ஆச்ரம தர்மங்களை விபாகம் செய்திருக்கிறார்கள் (வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள்).

ஃ ஃ ஃ

குழந்தைப் பருவத்திலேயே ஒழுங்கில் கொண்டு வந்து விடவேண்டும். ஒழுக்கத்திற்கு முதல் அங்கமாக என்ன வேண்டும்? பணிவு, அடக்கம், விநயம். கட்டுப்பாடு இருந்தால்தான் ஒழுக்கத்தோடு முன்னேற முடியும். கட்டுப்பட்டு நடப்பதற்கு அடக்கம் முதலில் வேண்டும். அஹங்காரம் போனால்தான் அடக்கம் வரும். ஸகல சீலங்களுக்கும் அடிப்படையாக இருக்க வேண்டியது விநயம்தான்.

மருந்தைவிட பத்தியம் முக்கியம். கல்வி என்கிற மருந்தை விட விநயம் என்ற பத்தியம் முக்கியமானது. இந்த விநயத்தைத் தான் பழைய காலத்தில் மாணாக்கனின் பிரதான லக்ஷணமாக வைத்தார்கள். 'விநயமுடையவன்' என்ற பொருள் கொண்டதான 'விநேயன்' என்றே மாணாக்கனுக்குப் பேர். இந்த விநய குணம் வருவதற்காகவேதான் முக்யமாக அவனை **குருகுலவாஸம்** என்று ஒரு ஆசார்யனிடத்திலேயே வாழும்படியாகக் கொண்டு விட்டார்கள். எட்டு வயசுக்குள் உபநயனம் (பூணூல் கல்யாணம்) பண்ணி குருகுலத்துக்கு அனுப்பினார்கள்.

உபநயனம் என்றால் என்ன? 'நயனம்' என்றால் 'அழைத்துப் போவது'. (கண்ணில்லாதவனை இன்னொருத்தன்தான் அழைத்துப்போக வேண்டியிருக்கிறது. இதிலிருந்து கண்தான் நம்மை அழைத்துப் போகிறதென்று தெரிகிறது. எனவேதான் அதற்கு நயனம் என்று பேர்.) 'உப' என்றால் 'ஸமீபத்தில்' என்று ஒரு அர்த்தம். 'உபநயனம' என்றால் 'ஸமீபத்தில் அழைத்துப் போகிறது'. எதற்கு அல்லது யாருக்கு ஸமீபத்தில்? குருவுக்கு ஸமீபத்தில்தான். அதாவது, குருகுலத்தில் கொண்டு விடுவதற்குப் பூர்வாங்கம்தான் உபநயனம்.

ஃ ஃ ஃ

ஒரு குடும்பத்தில் பத்தினி ஒழுங்கு தப்பி நடந்தால் அதன் பாப பலன் அவளைத் தாக்காது; அவளை நல்வழிப்படுத்தத் தவறிய புருஷனைத்தான் சேரும். தேச காரியத்திலே ஒரு பிரஜை தப்புப் பண்ணினால், அதற்கான பாபம், அவனைத் திருத்தி வைக்காத ராஜாவைத்தான் சேரும். அந்த ராஜாவே பண்ணும்படியான பாபம், அவனை நல்வழிப்படுத்தத் தவறிய ராஜப் புரோஹிதரைச் சேரும். நீதி சாஸ்திரத்தில் இப்படியாக

ஒரு பர்த்தாவுக்கும், ராஜாங்கம் நடத்துகிறவனுக்கும், ஆசார்ய னுக்கும் ரொம்பப் பெரிய பொறுப்பைத் தந்திருக்கிறது.

ஒரு பர்த்தா என்றால் மனைவியையும், ராஜாவானவன் குடிமக்களையும், குரு என்கிறவன் சிஷ்யனையும் அதட்டி அதிகாரம் பண்ணிக்கொண்டிருப்பதற்காக ஏற்பட்டவர்கள் அல்ல. இவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் ஆதீனத்தில் உள்ளவர்களை நல்வழிப் படுத்தக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள். அந்தக் கடமையை நிறைவேற்றத் தவறினால், தங்கள் ஆதீனத்தில் இருக்கிறவர் களின் பாபத்தைத் தாங்களே வாங்கிக் கொள்ள வேண்டியவர் கள் ஆவார்கள்.

ஃ ஃ ஃ

அந்தக் காலத்தில் ஒவ்வொரு பிதாவுக்கும் வேத சாஸ்திரங் கள் நன்றாகத் தெரிந்துதான் இருந்தது. இருந்தாலும் அவரவரும் தம் பிள்ளைகளுக்குத் தாங்களே கற்றுக் கொடுக்காமல் இன்னொரு குருவிடம் கொண்டுபோய்விட்டார்கள். ஏன்? அப்பா-பிள்ளை என்றால் ரொம்பவும் ஸ்வாதீனம் கொடுத்துப் போய் விடும்; அப்பாவும் செல்லம் கொடுத்து விடுவார். பிள்ளையும் ஸ்வாதீனத்தினால் அவருக்கு ரொம்பவும் அடங்கி நடக்காமல் ஸ்வாதந்திரியமாக இருக்கப் பார்ப்பான். அடக்கம் (விநயம்) என்பதான வித்யையின் ஆதாரப் பண்பே இல்லாவிட்டால் இவன் என்ன படித்துதான் என்ன பிரயோஜனம்?

ஃ ஃ ஃ

சாதாரணமாக ஒரு வேதத்தையும் அதன் அங்கங்களையும் மற்ற வித்யைகளையும் கற்பதற்குப் பன்னிரண்டு வருஷங்கள் பிடிக்கும். அதாவது எட்டு வயசுக்கு குருவிடம் வந்த பையன் சுமார் இருபது வயசு வரையில் குருகுல வாஸம் பண்ணியாக வேண்டும். பதினாலு பதினைந்து வயசுக்குமேல் மனஸின் விகாரங்கள் ஏற்படக் கூடிய பருவம். ''காளைப் பருவம்'' என்று சொல்கிறபடி காளை மாதிரி இஷ்டப்படி ஓட வேண்டும் என்று வேகம் ஏற்படுகிற சந்தர்ப்பம். இப்படிப்பட்ட சமயத்திலே சாந்தராகவும், பிரியராகவும், நல்ல சீலமுள்ளவராகவும் இருக்கிற குருவிடத்திலே படித்துக்கொண்டு பிக்ஷாசர்யம் பண்ணி வருவதானது பிரம்மசாரியின் இந்திரியங்களைக் கட்டுப் படுத்தி அவனை நல்ல பிரம்ம தேஜஸ் உள்ளவனாக ஆக்குகிறது. சரி யாக இந்த விகாரங்கள், வேகங்கள் தோன்றுகிற காலத்திலேயே இவனுக்குக் குருகுல வாஸத்தையும், பிக்ஷாசர்யத்தையும் ஏற்படுத் தினால் அது விபரீதமாகத்தான் ஆகும். பெரிதாக வெள்ளம்

வருகிறபோது கரைபோடப் பார்த்தால், கரையையும், கரை போட வருகிறவர்களையும்கூட அது அடித்துக் கொண்டு போய் விடும். அந்த மாதிரிதான் இதுவும். அதனால்தான் இவனை இதற்கெல்லாம் ரொம்பவும் முந்தி, ஒரு ஆறு ஏழு வருஷத் துக்கு முந்தியே, எட்டு வயசுக் குழந்தையாக இருக்கிறபோதே, குருகுல வாஸத்துக்கும், பிக்ஷாசர்யத்துக்கும் பழக்கப்படுத்தி விடச் சொல்கிறது நம் சாஸ்திரம். காமம் உள்ளே புகும் முன்பே காயத்ரி புகுந்து இவனைச் சுத்தப்படுத்த ஆரம்பித்து விட்டது. அதுவும், இதரப் பிரம்மசர்ய ஆசிரம நியமங்களும், எல்லாவற்றுக்கும் மேல் பிக்ஷாசர்யமும் இவனுக்கு அடக்கத்தை உண்டாக்கி விடுகின்றன. இதில் இந்திரிய அடக்கமும் சேர்ந்து விடுகிறது. பிரம்மசாரி என்பவன், பேருக்கு அப்படி இல்லாமல் வாஸ்தவமாகவே அப்படி இருக்கிறான்.

ஃ ஃ ஃ

பையன், வீட்டிலேயே ட்யூஷன் கற்றுக் கொண்டால் பையன் யஜமான், வாத்தியார் சேவகன் என்றே அர்த்தம். ஹாஸ்டலிலும், காலேஜிலும்கூடத் 'தான் யஜமான்' என்பதால் தான் ஸ்டிரைக் பண்ணுகிறான். வார்டனையும், ப்ரொபஸரையும் அடிக்கப் போகிறான். ஏனென்றால் இங்கெல்லாரும் முதலில் பையனிடம் கையை நீட்டிப் பணத்தை வாங்கிக் கொண்டு விடுகிறார்கள். குருகுலத்திலோ கடைசியாகத்தான் தக்ஷிணை. இம்மாதிரி விஷயங்களில் நம் பூர்விகர்களின் ஸைகாலஜி—நுட்பம் ஆச்சரியமாயிருக்கிறது. பல வருஷம் அவரோடு சேர்ந்து அன்பாகப் பழகினபின் சிஷ்யனுக்கே "எதைத் தருவோம், எதைத் தருவோம், எதைத்தான் தரக் கூடாது?" என்று நன்றியும் ஆர்வமுமாக இருக்கும். இம்மாதிரி சந்தர்ப்பத்தில் "இந்திராணியின் குண்டலத்தைக் கொண்டு வா", "நாகரத்தினத்தைக் கொண்டுவா" என்று கேட்ட குருமாரும் உண்டு. ஆனால் இப்படிக் கேட்டவர்கள் அபூர்வமே. சிஷ்யனால் இம்மாதிரி அஸாத்யத்தையும் சாதிக்க முடிகிறது என்று காட்டி அவனைப் பெருமைப்படுத்தவே இவர்கள் இப்படிக் கேட்பார்கள். பொதுவில் எந்தக் குருவும் துராசை பிடித்து எதுவும் கேட்க மாட்டார். அல்ப ஸந்தோஷியாக எதிலும் திருப்திப்பட்டு விடுவார்கள்.

ஃ ஃ ஃ

என் ஆசை—பள்ளிக்கூடத்தில் ஒரு வருஷம் fail—ஆகிவிட்ட தாகவாவது நினைத்துக்கொண்டு ஒவ்வொருத்தரும் தங்கள்

குழந்தைகளை ஒரே ஒரு வருஷமாவது குருகுல வாஸம், பிக்ஷாசர்யம் பண்ணவைக்க வேண்டும். பன்னிரண்டு வருஷம் என்றால் அடியோடு ஒருத்தரும் கேட்க மாட்டார்கள். அதனால்தான் ஒரு வருஷம் என்று கேட்கிறேன். சின்ன வயஸில் ஒரு வருஷம் இந்தப் பழக்கம் இருந்தாலும்கூட அதற்கு ஓரளவு நல்ல பலன் ஏற்படும். ஃபெயில் ஆன மாதிரி என்று நான் சொன்னாலும் வாஸ்தவத்தில் இது 'வேஸ்ட்'டாகப் போகாது. ஒரு வருஷ பிக்ஷாசர்ய குருகுல வாஸத்தில் மாணுக்கனுக்கு மூன்று வருஷத்து புத்தி தீக்ஷண்யம் உண்டாகும். அடுத்த வருஷமே பள்ளிக்கூடத்தில் ஒரு 'டபுள் பிரமோஷன்' வாங்கி ஈடுபண்ணி விடுவான். அதோடு குருவிடம் ஒரு வருஷம் தங்கியதில் பிராதஸ்நானம் (விடியற்காலக் குளியல்), ஸந்தியா வந்தனம் முதலான வழக்கங்கள் படிந்து ஆயுள் பூராவும் நிலைத்திருக்கும்.

ஃ ஃ ஃ

பகவானை எதற்காகப் பிரார்த்தனைப் பண்ண வேண்டும் என்பதில் அபிப்பிராய பேதம் உண்டு.

இந்த லோக வாழ்க்கையில் நமக்கு எண்ண முடியாத கஷ்டங்கள், சிரமங்கள், கிலேசங்கள், துக்கங்கள் ஏற்படுகின்றன. சரீரக் கஷ்டம், மனச்சஞ்சலம், பணமுடை, பயம், அவமானம் இப்படியாகக் கணக்கே இல்லாமல் அவதிப்படுகிறோம். இவை தீருவதற்கு வேறு வேறு வழிகளைத் தேடுகிறோம். உடம்பு சரியில்லை என்றால் டாக்டரிடம் போகிறோம். பணக் கஷ்டம் என்றால் கடன் கொடுக்கக்கூடியவர்களிடமும் போகிறோம். ஆவிகள் சேஷ்டை என்றால் மாந்திரிகரிடம் போகிறோம். பல விதமான பிரச்னைகள் தீர ராஜாங்க அதிகாரிகளிடம் போகிறோம். இப்படிப் பல பேரிடம் போனாலும், இந்தக் கஷ்டங்கள் தீர பகவானையும் பிரார்த்தனை பண்ணிக் கொள்கிறோம். நாம் கஷ்டம் தீர யாரைத் தேடிப் போகிறோமோ அவர்கள் நமக்கு அனுகூலமாக இருப்பதற்குப் பகவானைப் பிரார்த்திக்கிறோம். டாக்டர் மருந்து தான் கொடுப்பார். அது நமக்குப் பலிக்க வேண்டுமே! இதற்காகப் பகவானை வேண்டிக் கொள்கிறோம். ஒருத்தர் சகாயம் என்று அவரிடம் போகிறோம். ஆனால் போகிற வழியிலேயே நமக்கு ஒரு விபத்து வந்து விட்டால் என்ன பண்ணுவது? இதற்காகப் பிரார்த்தனை பண்ணுகிறோம்.

இந்த மாதிரியெல்லாம் பிரார்த்தனை பண்ணுவது தப்பு என்று சில பேருக்கு அபிப்ராயம். நம் கர்மாவுக்காகத்தான் கஷ்டம் வருகிறது. பகவானேதான் இந்தக் கஷ்டங்களைக் கொடுத்

துத் தண்டித்து, கர்மாவைத் தீர்க்கிறான். அதனால் இந்த மாதிரி லௌகிக விஷயங்களுக்குப் பிரார்த்தனை பண்ணவே கூடாது. பகவானுக்கே நமக்கு எதை, எப்போது, எப்படித் தரவேண்டும் என்று தெரியும். அதனால் எதுவும் பிரார்த்திக்கவே கூடாது. அவனை ஸ்மரித்தால் அது பேரானந்தமாக இருக்கிற தல்லவா? இந்த ஆனந்தம் ஒன்றுக்காக மட்டுமே ஸ்மரிக்க வேண்டும். பக்தி பண்ணுவதற்கு பலன், பக்தியில் கிடைக்கிற மன நிறைவேதான்: இந்தப் பெரிய நிறைவை விட்டு விட்டு, பக்தியைச் சின்னச் சின்ன தாற்காலிக நிறைவுகளுக்கு ஓர் உபாயமாக வைத்துக் சொள்வது ரொம்பவும் தப்பு. ஆகையால், அது வேண்டும், இது வேண்டும் என்று வேண்டவே கூடாது. எதற்காவது பிரார்த்தனை பண்ணலாமானால் அது நம்முடைய ஆத்ம பரிசுத்தி ஒன்றுக்காகத்தான் என்று இப்படிச் சிலர் அபிப்ராயப் படுகிறார்கள்.

பகவானே சொல்கிற வாக்குத்தான் நமக்குப் பெரிய பிரமாணம்.

ஃ ஃ ஃ

பிரார்த்தனை பண்ணுகிற வழக்கம் எப்படியோ ஒரு விதத்தில் ஏற்பட்டு விட்டால் தானாகவே அது காலக் கிரமத்தில் ஆத்மாபி-விருத்திக்காக மட்டும் பிரார்த்திக்கிற நிலைக்குக் கொண்டு விட்டு விடும். ஐகிகமாக நாம் பிரார்த்தனை பண்ணுவதெல்லாம் நமக்குக் கிடைத்து விடுகிறதா? இல்லை. சில பிரார்த்தனை நிறைவேறுகிறது. சில நிறைவேறாமல் போகிறது. ஆனால் நிறைவேறவில்லை என்பதற்காக நாம் பகவானை விட்டுவிடுவதில்லை. பக்தியை விட்டு விடுவதில்லை. வேறே பலனுக்காக பக்தி பண்ணினாலும் ஏதோ நாம் செய்கிற துளித் துளி பக்தியிலும் அதற்கென்றே ஒரு சுகம் நமக்குத் தெரிவதால், நாம் வேண்டிய பலன் கிடைக்கா விட்டாலும் பக்தியை விடுவதில்லை. என்னிடமே ரொம்பப் பேர் வருகிறார்கள். ஏதோ ஒரு கஷ்டம் தீரவேண்டும். பெண்ணுக்குக் கல்யாணம் ஆக வேண்டும். பிள்ளைக்கு வேலை கிடைக்க வேண்டும். வியாதி போக வேண்டும். கேஸ் ஜெயிக்க வேண்டும் என்று இப்படிப்பட்ட பிரார்த்தனைக்காக வருகிறார்கள். எல்லாருக்கும் எல்லாப் பிரார்த்தனையும் நிறைவேறுகிறதா? இல்லை. ஆனாலும் அதற்காக அவர்களுடைய அபிமானம் போய்விடவில்லை. தொடர்ந்து வந்து கொண்டேதான் இருக்கிறார்கள். நாம் பிரார்த்திப்பதெல்லாம் நமக்குக் கிடைத்துத் தானாக வேண்டும் என்று எதிர்பார்க்க நமக்கு அருகதை இல்லை என்று

உள்ளூற நமக்கே ஏதோ ஒரு தினுசில் தெரிந்திருக்கிறது. அத னால் நம் பிரார்த்தனை நிறைவேறாவிட்டாலும் பகவானை விடுவ தில்லை.

பிரார்த்தனை நிறைவேறாததற்காக நாஸ்திகர்களாகப் போனவர்கள் ரொம்ப ரொம்பக் குறைச்சல்தான். அநேகமாக ஸ்வாபாவிகமாகவே (இயற்கையாகவே) தான் நாஸ்திகர்கள் அப்படி இருக்கிறார்களே தவிர பக்தி பண்ணினதால் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை என்ற தாபத்தால் நாஸ்திகராவதென்பது ரொம்பவும் அபூர்வம் தான். லௌகிகமான பலனை உத்தேசித்து ஏதோ கொஞ்சம் பக்திபண்ண ஆரம்பித்து விட்டால்கூட சரி, அது ஒருபோதும் அணைந்து போய்விடுவதில்லை. வளராமல், பக்குவமாகாமல் வேண்டுமானால் போகலாம். ஆனால் அடியோடு இல்லாமல் போய்விடுவதில்லை.

இதனால்தான் கிருஷ்ண பரமாத்மா, ''நீ ஞானியாகவோ, ஜிக்ஞாஸுவாகவோ இல்லாவிட்டாலும் சரி; ஆர்த்தனாகவோ அர்த்தார்த்தியாகவோ தான் என்னிடம் வருகிறாயா? அது வும் சரி, ஏதோ காரணத்துக்காக என்னை நம்பி வந்து விட் டாய் அல்லவா? அதனால் நீயும் பக்தன் தானப்பா'' என்று பரம கருணையோடு இவர்களையும் பக்தர்களோடு சேர்த்துக் கொள்கிறார். லௌகிகத்தில் நமக்கு எந்தப் பிரார்த்தனை இருந் தாலும், இருக்காவிட்டாலும், 'நமக்கு ஒரு குறையுமில்லை; ஒன்றுக்காகவும் நாம் பிரார்த்திக்க வேண்டியதில்லை' என்ற நிறைந்த நிலையை நாம் நிஜமாக அடைகிற வரையில் ஆத்ம சிரேயஸுக்கானவற்றைப் பகவானிடம் பிரார்த்தித்துக் கொண் டிருந்தால் அப்படிப் பிரார்த்திப்பதே நமக்கு ஓரளவு தாப சாந்தியாக இருக்கும். நம் ஆத்மாபிவிருத்திக்கு எதெது தேவை என்று பகவானுக்கே தெரியும். நாம் கேட்காமலே அவன் கொடுப்பான் என்பதெல்லாம் வாஸ்தவமானாலும் கூட, நம் குறைகளை அவனிடம் நாமே வாய் விட்டுச் சொல்லிக் கொள்வ தில் நமக்கு ஓர் ஆறுதல் கிடைக்கத்தான் செய்கிறது.



# பின்னுரை

மனிதாபிமானத்திலிருந்து, மதாபிமானம் வரை; விஞ்ஞானத்திலிருந்து மெய்ஞானம் வரை; மனித மனோபாவத்திலிருந்து தெய்வகுணங்கள் வரை காஞ்சிப் பெரியவர்கள் தொடாத துறை எதுவுமே இல்லை.

அவர் விளக்கிச் சொன்னதுபோல, வேறு எந்த ஞானியும், மேதையும் விளக்கிச் சொன்னதாகவும் எனக்கு நினைவில்லை.

அவரது தனிமை, கல்வி, அறிவு, நுண்மாண் நுழைபுலம், தீர்க்க தரிசனம், எந்தப் பொருளின் மீதும் ஒருதெளிவு, தெளிவான பொருளில்கூட தன் அபிப்பிராயம் என்ற பணிவான முத்திரை இவையெல்லாம் வேறு எவரிடமும் காணமுடியாத அம்சங்களாகும்.

பல இடங்களில் அனுபவப்பட்ட சம்சாரிகள் கூடக் காண முடியாத கருத்துக்களை அப்பழுக்கற்ற துறவியான அவர் காண்கிறார்.

ஜாதியைக் கடந்த ஒரு நியதியை, சமமாகப் போதிக்கிறார்.

அவரது எழுத்துக்களை 'கல்கி'யில் படித்தபோது எல்லாம் அவற்றைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிடவேண்டும் என்ற ஆவல் எனக்குள் எழுந்தது.

அந்த வேலையை வேறு நண்பர்கள் மிக அழகாகச் செய்து வருகிறார்கள்.

இந்து சமயமும், இந்திய நாடும் அவர்களுக்குக் கடமைப்பட்டிருக்கின்றன.

ஒரு மாபெரும் மேதையின் கருத்துக்கள் வீணாகி விடாமல், குறைந்த பட்சம் தமிழறிந்தோர் அனைவரின் மத்தியிலும் வைக்கப்பட வேண்டும்.

அதற்காகவே முக்கியமான சில கருத்துக்களைத் தொகுத்து, குறைந்த விலையில் இப்படிக் கொண்டு வந்தேன்.

ஓராண்டுக்கு முன்பு ஒரு நிகழ்ச்சி.

காஞ்சிபுரத்தில் 'சங்கர பக்த ஜன சபை' என்று ஒன்றிருக்கிறது.

பலருடைய ஒத்துழைப்போடு அதை நிருவகித்து வருபவர்கள், 'வைத்தி', 'வைத்தா' இருவரும்.

அந்த பக்த ஜன சபை ஆண்டுதோறும் ஒரு மலர் வெளியிடுகிறது.

அந்த மலரில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டுதான் பெரியவரின் தேனம்பாக்கம் தனிமைக் குடிலும், அங்கிருக்கும் பசுவும், சிறு நிலமும் பாது காக்கப்படுகின்றன.

சென்ற ஆண்டு மலரை, நான் வெளியிட வேண்டும் என்று வைத்தியும், வைத்தாவும் அழைத் தார்கள்.

அந்த விழாவுக்குத் தலைமை வகித்தவர் உயர் நீதிமன்ற நீதிபதி திரு. பாலசுப்ரமணியம் அவர்கள்.

நான் விழாவிலே பேசி முடிக்கும்போது மணி ஒன்பது பதினைந்தாகிவிட்டது.

ஜஸ்டிஸ் பாலசுப்ரமணியம் விழா துவங்குவ தற்கு முன்பே, தேனம்பாக்கம் சென்று பெரியவரைப் பார்த்து வந்து விட்டார்.

நானும், வைத்தியும், வைத்தாவும் சென்ற போது, மணி ஒன்பது நாற்பத்தைந்து.

கொட்டகைக்குள்ளே துயில் கொள்ளத் தொடங் கிய பெரியவர், என் பெயரை வைத்தி சொன்னதும் எழுகின்ற அரவம் கேட்டது.

அரிக்கேன் விளக்கு மெதுவாகத் தூண்டப்படுவது தெரிந்தது.

கொட்டகைக்குள் சிறு கடன்களை முடித்து விட்டு பெரியவர் வெளியே வந்து, அதன் வாசற்படியிலேயே ஒரு பழம்பாயை எடுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

என்னிடம் அவர் கேட்ட கேள்விகள் அனைத்தும், என்னைப் பற்றி அவர் முன்பே அறிந்திருந்ததைக் காட்டின.

நான் கிணற்றோரமாக நின்றுகொண்டே இருந்தேன்.

இந்த நாட்டின் பிரதம மந்திரிக்குக்கூடக் கிடைக்காத வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

பெரியவர் சுமார் ஒருமணி நேரம் என்னோடு பேசிக்கொண்டிருந்தார்.

நான் எழுதிய பல விஷயங்கள் பற்றி என்னிடம் கேள்விகள் கேட்டார்.

சேர நாட்டு மன்னராக இருந்து, திருமால் பக்தியில் ஆள்வாராக மாறிய குலசேகர ஆள்வாரைப் பற்றி அவர் முன்பே எழுதியிருப்பார் போலிருக்கிறது. அந்த விஷயத்தையே சற்று அதிகமாகக் கேட்டார்.

பிறகு சேரநாட்டுக்கும், தமிழ்நாட்டுக்கும் உள்ள ஒற்றுமையை விளக்கினார்.

"கொங்கு நாட்டில் 'திருச்செங்கோடு' என்று ஒரு ஊர் இருக்கிறது; கேரளாவில், 'கொல்லங்கோடு' என்று ஒரு ஊர் இருக்கிறது. 'கோடு' என்ற சொல் தமிழிலே மலையைக் குறிக்கும் என்பது உனக்குத் தெரியும். அப்படிப் பார்க்கப் போனால் சேரநாடு என்பது பழங்காலங்களில் தமிழ் நாடாகவே இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால், கொங்கு நாடு சேர நாட்டில் ஒரு பகுதியாக இருந்திருக்க வேண்டும்" என்றார்.

அவர் மற்றொன்றும் சொன்னார்:

"மலையாள மொழிக்கும், தமிழ்மொழிக்கும் உள்ள ஒரு வித்தியாசத்தைப் பார் கண்ணதாசன். தமிழிலே, 'வந்தான்' என்று சொன்னாலே, ஒரு 'ஆண் மகன்' வந்தான் என்று அர்த்தம். 'வந்தாள்' என்றால் ஒரு 'பெண்மகள்' வந்தாள் என்று அர்த்தம். மலையாளத்தில், 'வந்நு' என்கிறார்கள். அந்த வினைச் சொல்லில், வந்தது ஆணா, பெண்ணா என்பது தெரிவதில்லை. அதனால், 'அவனா, அவளா' என்பதைச்

சொல்லியாக வேண்டியிருக்கிறது. ஆங்கிலத்திலும் அந்தக் கதிதான்'' என்றார்.

இளமைக் காலத்து ஞாபக சக்தி எனக்கு இன்னும் இருக்குமானால் அந்த ஒரு மணிநேர விவாதத்தையே நான் ஒரு புத்தகமாக்கி இருப்பேன். பல அற்புதமான விஷயங்கள் மறந்து போய்விட்டன.

இரவு ஹோட்டலுக்குத் திரும்பியபோது மணி பதினொன்று.

வெகு நேரம் அந்தச் சந்திப்பு என் கண்ணிலும், கருத்திலும் நின்றது.

மற்றும் ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து ஆறு மாதங்களுக்குப் பிறகு மறுபடியும் தேனம்பாக்கத்துக்குப் போனேன்.

ஆனால் அன்று, கூட்டம் அதிகம்; நான் பேச முடியவில்லை.

இப்போதெல்லாம் மனதில் ஏதாவது கவலைகள் தோன்றினால், 'ஒருமுறை காஞ்சிபுரம் போய் வரலாமா' என்று தோன்றுகிறது.

நான் எவ்வளவோ பேரை வாழ்க்கையில் சந்தித்திருக்கிறேன். யாருக்கும் இவ்வளவு தீட்சண்யமான கண்கள் இல்லை.

எதிரிகளும் களங்கம் சுமத்த முடியாதபடி துல்லியமான வாழ்க்கை வாழ்ந்து வரும் அவரைத் தமிழ்ச் சாதி முழுதும் புரிந்து கொள்ள வேண்டும்.

துரதிருஷ்டவசமாக அவர் பிராமண சாதியின் தலைவர் என்று, பிராமணரல்லாதார் பலர் கருதிக் கொண்டிருக்கிறார்கள்.

இது பிராமணர்கள் செய்த தவறா, நாம் செய்த தவறா?

இந்தத் தவறிலே இருவருக்கும் பங்கிருக்கிறது.

பிற சாதியினர் விரும்ப முடியாதபடி பிராமணர்கள் நடந்து கொண்டார்கள் என்பது உண்மை.

அதுபோலவே நமக்குச் சம்மந்தமில்லாதவர் போல நாமும் நடந்து கொண்டோம் என்பதும் உண்மை.

இந்த நிலையை இருவருமே மாற்றியாக வேண்டும்.

உலகமே அறிந்து கொள்ள வேண்டிய ஒரு மேதையை, ஒரு சாதியினர் தங்களுக்குள் அடக்கிக் கொள்வதன் மூலம், பக்தி மார்க்கத்துக்கு மட்டுமன்றி, தத்துவ மார்க்கத்துக்கும், உலகத்துக்குமே அவர்கள் துரோகம் செய்திருக்கிறார்கள்.

அவரைக் கண்டு கொள்ளாதிருப்பதன் மூலம் பிற சாதியினர், ஞானம் என்னும் பெரும் பொருளையே இழந்து விடுகிறார்கள்.

சாதி துவேஷத்தை மாற்றக் கூடியதும், நீக்கக் கூடியதும் பக்தி மார்க்கம் ஒன்றே. நாத்திகம் அதை வளர்க்குமேயல்லாது, நீக்காது என்பதைக் கண் கூடாகக் கண்டிருக்கிறோம்.

ஆத்திகம் தழைத்தோங்கி வரும் காலம் இது.

தமிழக மக்கள் அனைவருமே ஐயப்பனாகவும், பழனியப்பனாகவும் அவதாரம் எடுக்கும் காலம், இது.

அற்புதமான எதிர்காலத்தை நோக்கித் தமிழகம் நடை போடுகிறது.

இந்த நேரத்தில், 'இவன் பூணூல் அணிந்தவனா இல்லாதவனா' என்று பார்த்துக் கொண்டிருப்பதை விட்டுவிட்டு, காஞ்சிப் பெரியவரின் பெயரால் எல்லாரும் ஒன்றுபடுவதே எல்லோரின் நல் வாழ்வுக்கும் நல்ல வழி.

அன்பன்,

**கண்ணதாசன்**

